


# திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ்

ஆசிரியர்

**திரு. நா.கனகராசையய்யர், எம்.ஏ.,**

பொதுப் பதிப்பாசிரியர்

**முனைவர் தி.ஸ்ரீ. ஸ்ரீதர், இ.ஆ.ப.,**

முதன்மைச் செயலர் (ம) ஆணையர்

தொல்லியல் துறை

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் (ம) ஆய்வு மையம்

சென்னை - 5.

2011 - திருவள்ளுவர் ஆண்டு 2042

கோவையில் நடைபெற்ற உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டைச்
சிறப்பிக்கும் வகையில் தமிழக அரசின் சிறப்பு நிதி உதவியின் மூலம்
மறுபதிப்பாக வெளியிடப்படும் நூல்

# திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ்

ஆசிரியர்

**திரு. நா.கனகராசையர், எம்.ஏ.,**

பொதுப் பதிப்பாசிரியர்

**முனைவர் தி.ஸ்ரீ. ஸ்ரீதர், இ.ஆ.ப.,**

முதன்மைச் செயலர் (ம) ஆணையர்
தொல்லியல் துறை

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் (ம) ஆய்வு மையம்
சென்னை - 5.
2011 - திருவள்ளுவர் ஆண்டு 2042

# BIBLIOGRAPHICAL DATA

**Language** : Tamil

**Title of the Book** : THIRUVALLUVAR PILLAITTAMIZH

**Author** : Thiru N. Kanagarasaiyar, M.A.,

**General Editor** : Dr. T.S. Sridhar, I.A.S.,

**First Edition** : 1968 (Reprint)

**Paper Used** : 80 GSM Maplitho

**Size of the Book** : 1/4 Crown

**Printing Points** : 10

**No.of Pages** : 60

**No. of Copies** : 500

**Printer** : TAMCOS
No.46, Peters Road,
Royapettah, Chennai - 14.

**Price** : Rs. 58/-

**Publisher** : Government Oriental Manuscri
Library and Reserch Centre,
Chennai - 5.

**Subject** : Ciru Prabandham

முனைவர். தி.ஸ்ரீ. ஸ்ரீதர், இ.ஆ.ப.,
முதன்மைச் செயலர் (ம) ஆணையர்,
தொல்லியல் துறை,

தமிழ்வளர்ச்சி வளாகம்,
ஆல்சுசாலை, எழும்பூர்,
சென்னை – 600 008.
தொ.பே./நகரி 91442819
மின்னஞ்சல் : tnarch@tn.nic.in
வலைதளம் : www.tnarch.gov.in

# அணிந்துரை

கோவையில் 2010 ஆம் ஆண்டு சூன் திங்கள் 23 முதல் 27ஆம் தேதி வரை நடைபெற்ற உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு இனிதே நடைபெற்றதையொட்டி தமிழக கலை, வரலாறு, பண்பாடு, தொழில் நுட்பம் மற்றும் இலக்கியப் பெருமைகளை உலகிற்குப் பறைசாற்றும் நோக்கில் பன்னிரெண்டு நூற்களை முதற் பதிப்பாகவும், ஏழு நூற்களை மறுபதிப்பாகவும் தொல்லியல் துறையின் மூலம் வெளியிட தமிழக அரசு அனுமதி அளித்தது. மறுபதிப்பாக வெளியிட அனுமதி அளிக்கப்பட்ட ஏழு நூல்களுள் ஒன்று திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ்.

இந்நூல் திரு நா.கனகராசையர், எம்.ஏ., அவர்களால் 1941ல் இயற்றப்பட்டது. இவர் பெருங்காப்பியங்கள். பிரபந்தங்கள். வரலாற்று நூற்கள். செய்யுள் நாடகங்கள். மொழிப்பெயர்ப்புகள் முதலியவற்றையும் இயற்றியுள்ளார். புதுகோட்டையிலும், குடந்தையிலும் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்துள்ளர். அரிய இந்நூல் நாற்பத்தி மூன்று வருடங்களுக்கு முன்பு திரு ஆர்.கே.பார்த்தசாரதி, எம்.ஏ., எல்.டி., மற்றும் திரு.பூ.சுப்பிரமணியம், தமிழ்ப்புலவர் ஆகியோர்களை பதிப்பாசிரியர்களாகக் கொண்டு வெளியிடப்பட நூல் இது.

அரிய இந்நூலை மறுபதிப்பாக வெளியிட அனுமதியையும் நிதியுதவியையும் வழங்கிய தமிழக அரசுக்கும் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களுக்கும், மாண்புமிகு பள்ளிக் கல்வித்துறை அமைச்சர் அவர்களுக்கும், சுற்றுலா மற்றும் பண்பாட்டுத்துறை செயலர் அவர்களுக்கும் தொல்லியல் துறையின் தலைவர் என்ற முறையில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை மிகச்சிறப்பாக வெளிக் கொண்டு வர பன்முகமாக பணிபுரிந்த அரசினர் கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகம் மற்றும் ஆய்வு மைய நூலகர் மற்றும் காப்பாட்சியர் (பொ) இரா. சந்திரமோகன் அவர்களுக்கும் தமிழ்ப்புலவர் திரு. ச. தியாகராசன் அவர்களுக்கும் தொல்லியல்துறையின் உதவி இயக்குநர் (பொ) திரு. இலா. எபிரியான்ஸ், கண்காணிப்பாளர் திருமதி. ஞா. லீலாதேவகுமாரி அவர்களுக்கும் எனது பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அரிய இந்நூலை தமிழக மக்கள் அனைவரும் ஏற்று பயனடைய வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

(தி.ஸ்ரீ. ஸ்ரீதர்)
முதன்மைச் செயலர் (ம) ஆணையர்

இடம் : சென்னை

நாள் : 01.03.2011

# திருவள்ளுவர் பிள்ளைத்தமிழ்

—:o:—

"அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத்தறித்த குறள்"

என உலகமெலாம் விரும்பியேற்க, இரண்டடியால் உலகளந்து உயர்பொருளை உயிர்கட்கீந்து, நிலையான இன்பமதின் நிலைக் களனாய் நின்றிலங்கும் நாவலனும் பொய்யாமொழிப்புலவன் வள்ளுவனின் அளவிலா அரும்பணியில் ஆழ்ந்த பெருங்காதலினால் அன்னவனை மூன்று முதலா மூவேழு திங்களின் பத்துப் பருவமுடை இளம்பருவப்பிள்ளையாக்கி, குறைவற்ற செல்வமாம் நோயற்ற வாழ்வுடைய பிள்ளையே பிற பருவங்களைப் பெற இயலுமாதலின் அப்பிள்ளையின் வாழ்வு விரும்பிய காப்பு மழலைமொழியின் மயக்க முடை செங்கீரை, சிறப்பிணைப் பாடும் தால், கைகொட்டி விளையாட வைக்கும் சப்பாணி, இணையிலா இளவமுதம் விரும்பும் முத்தம், தளர் நடையொடு வர அழைக்கும் வாரானை, உடன் ஆட அழைக்கும் அம்புலி, வாழ்வாமமைப்பை அழிக்காதிருக்கவேண்டும் சிற்றில், மகிழ்வொடு முழக்கவேண்டும் சிறுபறை, தெருவினில் உருட்டி விளையாடவேண்டும் சிறுதேர் எனும் பத்துப் பருவங்களாகப் பகுத்துப் பைந்தமிழில் அவன் செய்த பெருஞ் சிறப்புடைப் பொருள்களைப் போற்றிப் பாடும் நூலாதலின் இஃது 'திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ்' எனும் பெயர் பெற்றது.

பிள்ளையின் அருமையுணரும் உள்ளமே, அன்பு மலர, அதன் வழி அருள் சுரக்க, உலகை ஒத்து நோக்கித் தனக்கென்பதழியப் பிறர்க்கெனவாழும் பெற்றியதாகு மல்லவா? இவ் வருமையின் அடிப்படையில் எழுந்ததே இப்பிள்ளைத்தமிழ் நூல்.

காலைக் கதிரவனே விரும்பிப் போற்றப்படுகின்றான். காரணம்? எவ்வகையுயிரும் அதன் இளமைப்பருவத்தே பொலிவொடு விளங்கிப் போற்றப் பெறுதல் இயற்கை. அதுபோல, அன்பிற்குரியாரை அவ்விளமையாம் பிள்ளைப் பருவத்தில் காணவிரும்புவதே அன்புள்ள மாகும். அத்தகைய அன்புள்ளத்தே சுரந்த பாடல்களின் தொகுப்பே 'பிள்ளைத்தமிழ்' என்னும் சிறந்த பிரபந்தமாக வளர்ந்து நிற்கின்றது உணர்ச்சியும் உவகையும் நிரம்பிய பாடல்கள் தமிழில் பல உண்டு பத்தியும் பேரின்பமும் பயப்பன பலப்பல; ஆசு கவிகளும் உண்டு

வசைகவிகளும் உண்டு. ஆனால், இனிமைச் சுவையில் ஈடற்று விளங்குவன இதுபோலுமுள்ள பிள்ளைத்தமிழ்ப் பாக்களேயாகும்.

இலக்கண வரம்புகடவா இந்நூல், விநாயகர் வணக்கம், கலைமகள் வணக்கம், குரு வணக்கமும் அவையடக்கமும், உலகப்புலவர் குழு வணக்கம் எனும் தலைப்புடை நான்கு பாக்களைப் பாயிரமாகக் கொண்டிலங்குகின்றது.

சான்றோர் விரும்பியாங்கு, காப்பின் முதற்பாவின் முதற் சீர் மங்கலம் முதலாகிய பொருத்தமமைந்த 'உலகு' எனத் தொடங்குவதோடு, காப்புப்பருவத்தே இன்னின்னாரைப் பாடுகவெனக் கற்பித்த விதிகளை முறையே கற்றிருந்தும் ஆசிரியர்தம் உள்ளத்தே அன்பின் திருவுருவாம் வள்ளுவத் திருமகன் வீற்றிருந்து இயக்குவித்த வண்ணம்

"அலகிலதா மொருபொருளைப் பெயர்குணங்க ளகன்ற
அருவமுள தாயினும்யா மறிவகத்துப் பெறவே
ஆதியெனப் பகவனென அகமலர்ந்து துதிப்பாம்
........................................................................
நயமுணரும் வள்ளுவனை நன்குபுரக் கெனவே."

"மலர்மிசை யேகிவயங்கிய தேவனை—வாய்மன நண்ணகிலா
வள்ளலை மெய்ம்மையி னுள்ளமுணர்ந்து—வணங்கி வழுத்துவமே
........................................................................
நல்லவர் கூறிய வள்ளுவன் மெய்ப்புகழ்—நன்குவளர்ந்திடவே."

என்பனபோல, ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை யேகினான், வேண்டுதல் வேண்டாமையிலான் போன்ற வள்ளுவன் வகுத்த இறைவர்களையே விளித்து அறஞ்சொற் புலவனும் குழவியைக் காக்குமாறு வேண்டுந்திறம் புதுமை பயப்பதொன்றாகும்.

"........... தமிழ மொழியின்
அறியவுள பொருளெலா மோதுதல் விளக்கவே
யகரமுத னகரவிறுவாய்ப்
பகரவரு தமிழ்மறையை யுலகுகொள வருள்செய்த
பைந்தமிழ்த் தெய்வமகவே
........................................................................
செந்தமிழ்த் திருநாடு செய்ததவ வுருவமே
செங்கீரை யாடியருளே."

எனும் செங்கீரைப் பருவத்துவக்கப்பாடல் தமிழ் மறையின் சிறப்பையும் தெய்வமகனின் திறத்தையும் தொகுத்துரைக்குந்திறமும்,

"குழலினிசை யாழினிசை செவியுறுத லமுதென்று
கூறுபவர் மக்கள் குழறும்
குதலைமொழி கேட்கிலாப் பாவியர்க ளெனநன்று
கூறியருள் நாவின் மன்ன"

என்பன போன்ற பல அடிகள் குறட்பாக்களின் கருத்தொடு நாவலனை விளித்து வேண்டுமழகும் இன்னபிறவும் படித்தின் புறத்தக்கன.

ஒவ்வொரு பருவத்தின் சிறப்பும் இவ்வாறே கூறத்தகுமெனினும் விரிவஞ்சி, பிள்ளைத்தமிழ் நூலுக்கே சிறப்புடைத்தாயமைந்த இன்சொல், வேறுபாடு, கொடை, ஒறுத்தல் முறைகளின் துணைகொண்டு அம்புலியை விளையாட அழைக்கும் பருவப்பாடல்களின் சொல்லும் பொருளும், முறையும் பிறவும் ஆழ்ந்துணரும் தகுதிபெற்றவை என்பதை மட்டும் எடுத்துக்காட்டுமுகத்தான் சில அடிகளைத் தந்தமைகிறோம்.

"உலகவிரு ளோட்டியுயிர் மனமலர வரியபணி
யுரிமையொடு பூணலானும்"

"ஆயிரங் கதிர்களுள ஞாயிறம் பகவனரு
ளணியொளியி னொளிபெறுதிநீ
ஆயிரங் கதிர்களொடு முந்நூற்று முப்பதென
வமைகதிர்கொள் தேவனிவனே"

"இருளினால் மகிழுமன முடையைநீ யென்பதனை
யெவ்வுலகு நன்குணருமே
இருளையே மாற்றியுயர் மெய்யறிவி னொளிநல்கு
மேற்றமுள னெம்பெருமகன்."

மேலும்,

'*சங்கத் தமிழ்வள ரப்பொழி யும்புயல்*'
'செந்தமிழ் நன்மகள் தந்த தவச்சிசு'
'மயிலாபுரியின் வாழ்வுகக்கும் வள்ளால்'
'தமிழ்மகளின் முடிமணியி னொளிர்குறளை யருள்தேவ'
'தெளிவுமலி தமிழ்மறையை யுலகுகொள வருள்குழவி'

எனப் பலவாகிய சிறப்புப்பெயர்களுடன் குழவியை விளிக்குமழகு மாழமும் துய்த்துணரத் தக்கனவாம்.

"கொக்கை நிகர்ப்ப வடங்குக தம்வலி—கூம்பிய பருவமதில்
கூடிய நாளினில் மற்றது குத்திய—குத்தை நிகர்ப்புறுக
.............................................................
தக்க சமர்த்திற மீதெனும் நாவல—தாலோ தாலேலோ."

''நெடியபுனல் வாழ்முதலை புலிகரடி களிறுகளை
நேருறப் பொருது வெல்லும்
நிலமீது வந்ததெனின் ஞமலியு மதைப்பொருது
நிலைகலக் கிடவல்லதாம்''

''அகலா ரணுகார் தீக்காயு
மவரே போல்க விகல்மன்னர்
அவையிற் சேர்வா ரெனப்புகன்ற
அறிவின் செல்வா வருகவே.''

என்பனபோன்ற தமிழ்மறைப் பாக்களின் கருத்தை உள்ளடக்கி, நூற்றுக்கும் மேற்பட்ட பல சொற்பொருள் விளக்கமும் பெருக்கமும், எளிமையும் பெருமையும் கொண்டிலங்கு மிவ்விலக்கியம், உட்பொருட் குறிப்பும் உரை விளக்கமும் பெற்று ஆழ்ந்து கற்குநூல்களில் ஒன்றாகும்.

இந்நூல் கி. பி. 1941-இல் இயற்றப்பெற்றதாக அறியக்கிடக்கின்றது. பல பெருங்காப்பியங்கள், பிரபந்தங்கள், வரலாற்று நூல்கள், செய்யுள் நாடகங்கள், மொழிபெயர்ப்புக்கள் முதலியவற்றைச் சிறப்புற இயற்றியவரும், புதுக்கோட்டையிலும், குடந்தையிலும் தமிழ்ப்பேராசியராகப் பணிபுரிந்தவருமான, ''அருங்கலைவிநோதர்'' திரு. நா. கனகராஜையர், எம். ஏ., அவர்களால் இயற்றப்பெற்ற இந்நூல் அவரால் இந்நூலகத்திற்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டனவும், எம்மால் ஆர். 7795 என்ற எண்ணில் பாதுகாக்கப்பட்டு வருவனவுமான அறுபத்தைந்து பிரபந்தங்களில் ஒன்றாகும்.

வள்ளுவப் பெருந்தகையின் இரண்டாயிர மாண்டு நிறைவு விழாவினைச் சிறப்புறக்கொண்டாடி மகிழவிருக்கும் தமிழகத்தே, விழாவின் தொடக்க நிகழ்ச்சிபோலும் வெளியாகு மிந்நூல் கல்லூரிப் பாடநூலாகவமையும் பெற்றியினைப் பெற்றிருக்குங் காரணத்தால் இவ்விழாக்காலத்தே அப்பொறுப்பினைத் திறம்பட வேற்றுத் திகழுமென்ற பெரு விருப்பும் நம்பிக்கையுமுடையேமாய் இதனை வெளியிட்டு மகிழ்கின்றோம்.

பதிப்பாசிரியர்கள் :-

திரு. ஆர். கே. பார்த்தசாரதி, எம். ஏ. எல். டி.,
வித்துவான். பூ. சுப்பிரமணியம்.

# திருவள்ளுவர் பிள்ளைத்தமிழ்

## பாயிரம்

### விநாயக வணக்கம்

1. நீண்டுமிமிர் மாணிக்க வண்ணம் பூண்ட
 நிறைகுணத்தன குறுந்தாளன சிந்தை யார
நினைகின்ற வடியார்கணம் வேண்டிற் றெல்லாம்
 நெறிமுறையே நிறைவேறப் புரியு மண்ணல்
தேண்டுபவர் பெறலரிய செல்வ மான
 சிவமயமாம் பரஞ்சுடரின் முதன்மைச் செல்வன்
சித்திமுத்தி யெனுமிருமை பெண்மை பூண்டு
 சேரவரு மொருமையுள பிரம மூர்த்தி
யீண்டுமினி வருமுலக வாழ்வின் கண்ணும்
 எல்லையிலாப் பேரின்ப நிலையின் கண்ணும்
இன்னருளே பொழிவள்ளல் கமலத் தாள்கள்
 இறைஞ்சிமனத் தடத்திருத்தி யேத்தல் செய்வாம்
பூண்டுபுகழ் விளங்குடலிற் பொலியா நின்ற
 புலவர்திரு வள்ளுவராம் போத மூர்த்தி
புவியினருக் கமுதமெனக் குறளைத் தந்த
 புண்ணியர்பிள் ளைத்தமிழைப் போற்று மாறே

### கலைமகள் வணக்கம்

2 வேதமென வுலகுகொள விரிந்தவறி வெல்லாம
 விளக்கமுற நின்றவொரு மெய்த்துணையாஞ் செல்வி
வேதாவி னுவகமே கோயிலெனக் கொண்டு
 வித்தகர்தம் பெரும்பேரு மிளிருமொரு தெய்வம்
சீதமலர் வெண்கமலம் வீற்றிருக்கும் தேவி
 செயற்கரிய செயல்புரியத் திறமருளும் வாணி
செந்தமிழும் வடமொழியும் திரண்டுருவா யமைந்த
 திருவிழிக ளிரண்டுடையாள் திருவடிகள் பணிவாம்

போதமய வுருவமுள பொருளையுளத் தறிந்தே
புவியினர்க ளறிந்துகொளப் பொழிந்தருளும் வள்ளல்
புலவரினத் தலைமணியாப் புகழ்பொருந்து பொலிவாற்
புலவரெனுந் திருப்பெயரே பூண்டருளும் விபுதர்
சீதநய வமுதமயச் செழுமொழிக ளிசைத்துத்
திருக்குறளாந் தெள்ளமுதைத் தெளித்தருளுந் தேவர்
திருப்புகழை யுலகறிந்த திறமதனை விளக்கும்
சிறுபணியாம் பனுவலிது சிறந்துநலம் பெறவே.

## குருவணக்கமும் அவையடக்கமும்

3. பழம்பனுவல் மிகப்படைத்துப் பயில்பவர்த முள்ளம்
பயிரெறும்பே ரின்பமுறப் பயின்றபினர்ப் புலமைப்
பயன்படைத்துத் தமக்குமுல குள்ளவர்க்கு நலங்கள்
பயப்பவலி பெறற்குரிய பண்பையருள் திறங்கொள்
செழுந்தமிழை முறைமுறையே சிறியனேன் பயின்று
தேவரமு தினுஞ்சிறந்த திருநூல்கள் விளக்கும்
திருப்பொருளை யறிந்துய்யும் திருவருளைப் பொழிந்த
திருவிளங்கு நாரணரா மறையவர்தாள் பணிந்து
தொழுந்தகைமை தமக்கெனவே துணிந்துலக முரைக்கும்
தோமறுபே ரறிவுடைய புலவர்பலர் நிரம்பிச்
சொற்பொருளின் சுவைமலியும் பனுவல்பல வியற்றிச்
சோர்வறவே நலம்பொலியுந் தமிழகத்தின் கண்ணே
எழுந்தகைமை யறிதலிலாச் சிறியனேன் துணிவான்
இணையதுமெய்ப் புலவர்புக ழிசைக்குமொரு கருத்தான்
இயன்றளவி னமைத்தபின்னைத் தமிழிதனி னுள்ள
இழிவகற்றி வள்ளுவர்சீ ரெனத்தழுவு முலகே.

## உலகப் புலவர் குழு வணக்கம்

4. தலைமைநலம் சிறந்தமைந்த தகைமையெலா முடையார்
தமதுநல மொருபொழுதும் தமதுளத்தே நினையார்
தரைமுழுதும் நலம்பெருகு தத்துவங்கள் விரித்தே
தவப்பொழுதாத் தம்பொழுதைத் தகக்கழிக்கும் [குணத்தார்
நிலைமையுள பொருளொன்றே நிலையின்மை பிறவாம்
நிலப்பொருள்க ளனைத்துக்கு நிலவுமென வுரைக்கும்
நெறியிழைப்பத் தமதுளத்தே நிமிர்ந்தெழுந்த கருத்தாம்
நிலைப்பொருளை யுலகுகொள நிகழ்த்தியருள் செயவோர்

புலைமையிலே துணிந்துசெலும் புல்லியரும் பொருளைப்
பொருந்தியதாற் பாவவினை புரிந்துசெயு மினமும்
புண்ணியநன் னெறிதெளியப் புலனெறியான் விளக்கும்
பொறுப்புடைய நாத்திறத்துப் புவிமகிழும் பிறப்பார்
புலமையெனும் பெருந்திருவே பொருந்திமகிழ் புரையோர்
புவிமகளைத் தவமகளாப் புரியவரும் பெரியார்
புலவர்திரு வள்ளுவனுர் புகழுரைக்கும் கவிதை
பொருந்துநலம் பெறவருள்க பொலிகவுல கெனவே.

# 1. காப்புப் பருவம்

## ஆதிபகவன்

5. உலகிலுள வுயிர்க்கணங்கள் தோற்றமுறல் வளர்ச்சி
ஒடுங்குதலா முத்தொழிற்கு முரியநிலைக் களமாய்
ஒருமையிது பன்மையுள பொருளிதுவென் றுண்மை
யுள்ளபொரு ளில்லதொரு பொருளளவைக் கடந்த
நிலமுளதோர் பொருளிதுவென் றிறப்புநிகழ் வெதிர்வா
நிகழ்த்தியமுக் காலமிட நிலைகடந்த தெனவே
நெறிகள்பல வாய்விரிந்து நினைப்பதனு ளடங்கா
நித்தியமாம் பொருளென்று தத்துவநூல் புகலும்
அலகிலதா மொருபொருளைப் பெயர்குணங்க ளகன்ற
அருவமுள தாயினும்யா மறிவகத்துப் பெறவே
ஆதியெனப் பகவனென அகமலர்ந்து துதிப்பாம்
அவனருளா லருந்தமிழி லறியதொரு பெருநூல்
நலமுறவே படைத்தபுகழ் நாவலனும் பெரியன்
ஞானநெறி யனுபவத்தா னயந்துணர்த்தும் புலவன்
நவிலரிய பெரும்பொருளை யிரண்டடியா னவிற்றும்
நயமுணரும் வள்ளுவனை நன்குபுரக் கெனவே. (1)

## வாலறிவன்

6. நூலறிவி னறிவரிய நுண்பொருளா விளங்கும்
நுண்மையினைப் பெரியவற்றுட் பெரியதொரு பொருளை
நோக்கினுக்கு நோக்குதிற மளித்தருளும் பொருளை
நுவல்திறத்தை நாவினுக்குப் பெருக்கியருள் பொருளை
வாலறிவ னெனும்பெயரா னறிவர்கணம் வணங்கும்
வள்ளலினை யாண்மையொடு பெண்மையிலா மதிப்பை
மறையெனும்பேர் மறைக்குவர மறைந்தருளு மறையை
மனநினைந்து நாப்புகழ்ந்து வணங்குவது புரிவாம்

ஞாலமிசை வாழுமுயி ரனைத்துநல நெறியின்
நன்மையினை யறிந்துய்யத் தீமையினை யொழிக்க
நாற்பொருளின் திறத்தினையு முப்பாலின் வகுத்து
நவிற்றியருள் முதற்பெரிய நாவலனும் புலவன்
சீலநெறி பொய்யறியா மொழிகளினால் விளக்கித்
தென்னர்தமிழ் மொழிக்குயர்வு செய்தருளும் புலவன்
சிறப்புடைய மாதானு பங்கியெனும் பெயராற்
செகமருளும் வள்ளுவனைக் காத்தருளிச் செயவே. (2)

## மலர்மிசை யேகினான்

7. நிலமிசை வாழ்பவர் நேரிய நூல்புகல்
நேய நெறிச் செலவால்
நிறைமொழி யோதிய மறைமொழி மெய்ப்பொருள்
நேரலு நெஞ்சகமாம்
மலர்மிசை யேகி வயங்கிய தேவனை
வாய்மன நண்ண கிலா
வள்ளலை மெய்ம்மையி னுள்ள முணர்ந்து
வணங்கி வழுத் துவமே
புலமிசை நானில மக்களின் வாழ்வு
பொருந்துத லாய்ந்து தெளி
புலமையி னுத்தர வேதமெனப் புகழ்
போதரு நூலருளும்
நலமிசை நாவுறு ஞானியர் நாயகன்
நான்முக னுமெனவே
நல்லவர் கூறிய வள்ளுவன் மெய்ப்புகழ்
நன்கு வளர்ந் திடவே. (3)

## வேண்டுதல் வேண்டாமை யிலான்

8. யாண்டுளனப் பெருந்தலைவ னெனவே யின்னும்
எண்ணிறந்த மதநெறிகள் துருவா நின்ற
இறையவனைக் குணங்குறிக ளில்லான் றன்னை
யாவையுமா யல்லவுமா யிருந்த லானே
வேண்டுதல்வேண் டாமையிலா விமலன் றன்னை
வேதங்கள் விளக்கிலா மெய்யின் செல்வம்
விளங்குதலே தன்னொளியா விரிந்து நின்ற
மெய்ப்பொருளை மனநினைந்து வேண்டல் செய்வாம்

ஈண்டுபல பிறவிகளிற் பெரிதும் துன்பம்
　　எய்தியுமப் பிறவிமருந் தெதுவென் றோரா
இயல்புடைய மக்களின முணர்ந்தே வாழ
　　இனிமைசெறி யறப்பெருநூ லியற்றுஞ் செல்வன்
மாண்டுபடா மெய்யுணர்த்தும் வேத மான
　　வாயுறைவாழ்த் தருளுதிறம் வாய்ந்த நாவன்
மனந்தூய்மை நெறிவிளக்க வந்த வள்ளல்
　　வளங்குறையா வாழ்வதனில் வாழ்க வென்றே. (4)

## பொருள்சேர் புகழாளன்

9. மருள்சேர்ந்த மனமுடைய மக்கள் தம்மை
　　வாயறியாச் சொற்களினால் வழுத்திப் போற்றி
வாக்கினுக்கு வறுமைதரும் வழுவே பூண்ட
　　மதிதெளியாப் புலவருக்கு மதியைக் காட்டி
இருள்சேர்ந்த நெறிவிலக்க இயங்கா நின்ற
　　இறையொளியைக் குறுகுநெறி யினிது சொற்ற
இணையறுபே ராசிரியன் புலமைச் செல்வன்
　　இரண்டடியா லுலகளந்தான் இனிது வாழ்வான்
அருள்சேர்ந்த வுருவமுளா னமரத் தன்மை
　　அறிவினா லடைபவருக் கருளும் வள்ளல்
அளவகன்ற மறைகளிலு மவற்றின் வேறாய்
　　அமைகின்ற நிலங்களிலும் விளங்கு மண்ணல்
பொருள்சேர்ந்த புகழாளன் புலமைச் செல்வர்
　　புகழ்ந்துசொலும் இசைக்கடலின் புறத்தே நின்ற
போதவுரு வுடையொருவன் புரைதீ ரின்பப்
　　பொருளாவான் கழனினைந்து புனைகுவாமே. (5)

## ஐந்தவித்தான்

10. இந்தியத்தா யடைவுரிய புலன்க ளெல்லாம்
　　இவையிவையென் றேவாதே யெய்த நாடி
யிருந்தநிலை பேரின்ப மெளிதே யெய்தும்
　　இதயமெனுங் கருவியினை வறிதே போக்கி
மந்திரத்தான் வயமாகாப் பேய்கள் போன்று
　　மகிதலத்து வாழ்வினிலே மயங்கி வாழும்
மாந்தருக்குப் பொதுமறையை வழங்க வந்த
　　வள்ளலெனும் வள்ளுவனை மகிழ்ந்து காக்கப்

புந்திமத்தா லருளாழி கடைந்து தேடும்
புலவருக்கு விளங்கிநின்ற பொருளா வாறும்
பூரணவா னந்தாவொளிப் பிழம்பால் நின்று
புவியும்விண்ணும் நிறைவானும் பொறியின் வாயில்
ஐந்தவித்தா னவையடங்கா மக்கட் கெல்லாம்
அருள்வெள்ளம் பொழியவரு மவனு வானும்
ஆர்கொலோ வெனமறைகள் அறியத் தேடும்
அறக்கடலே யுளத்திருத்திப் பணிகு வாமே. (6)

## தனக்குவமையில்லாதான்

11. மனக்குநல முதவியுயர் வழியை நாட்டும்
வளங்கொளறப் பெருநூலென் றுலகம் போற்ற
வழங்குதிரு வள்ளுவராம் முப்பா னூலே
மறைத்தெளிவா வருளுதிறம் வாய்த்த வள்ளல்
இனக்குழுவாம் புலவரிடை யிணையென் றேத
எவருமிலாப் பெருமையினு லுலக மெல்லாம்
எமக்குரிய னெமக்குரிய னிவனென் றேத
இசைபுனையும் வள்ளுவனே இனிது வாழ்வான்
எனக் கெனவே யிதுவேண்டும் ஈதுவேண்டா
எனப்புகலும் கருத்திகந்த இயல்பினுலே
எவ்வெவ ரெப்படி யிசைத்துப் போற்றினுலும்
இசைந்தருளுங் கருணையுரு வியைந்த மூர்த்தி
தனக்குவமை யில்லாதான் தாள்க ளென்னும்
தாமரையை யுளக்கோயில் தயங்க வைத்துத்
தகுநெறியா னினைந்துருவம் விளங்க வெண்ணித்
தலையாரக் கையார வணங்கு வோமே. (7)

## அறவாழியந்தணன்

12. பிறவாழி கடப்பதனை நினைந்து நோற்பார்
பெறற்குரிய புணையெனவே பிறங்கு வானைப்
பிணியாழி சுவற்றியருள் மருந்தா வானைப்
பேச்சினெடு நினைப்படையாப் பெருமை யானை
அறவாழி யந்தணனை யறிவா வானை
யருளாளப் பெயர்பொருந்து மவனை வானை
யனிலனனல் புனல்மண்ணை யடக்கு வானை
அளவைகளா னளப்பரிய அளவை யானைத்

துறவாழி படிந்தவர்க்குத் துப்பா வானைத்
துணையெனவே மனநினைந்து துதித்தல் செய்வாம்
தூயவற முப்பத்தெட் டதிகா ரத்தால்
துணையாய பொருளெழுபா னதிகா ரத்தால்
உறவாழி வளர்காம மிருபத் தைந்தாம்
உரியவதி காரத்தால் உரைத்த நாவன்
உரைக்கடங்காப் பெயர்பூண்ட உயர்பே ராளன்
உலகிறைஞ்சு பெரும்புலவ னுயரு மாறே. (8)

## எண்குணத்தான்

13. பெண்குணத்தா னருள்விளக்கும் பெருமை யோன்காண்
பெண்ணுருவம் பொலிவுபெற விளங்கு வோன்காண்
பிறவியுறு முயிர்களுக்குத் தந்தை தாய்காண்
பெண்ணுமிலா வாணுமிலாப் பிழம்பா வான்காண்
எண்குணத்தான் எனமதங்கள் இயம்பு வோன்காண்
இயலொளியா லெங்குநிறை யுருவு ளான்காண்
எழுத்தறியா மறைமொழியு ளிருப்பு ளோன்காண்
எனவறியும் பரம்பொருளை யிறைஞ்சல் செய்வாம்
வெண்குணத்தா ரறிவரிய மெய்ம்மைச் செல்வம்
விளக்குதற்கே யவதரித்த விபுதன் றன்னை
வேதமொழி பலர்பயிலா மெய்ம்மை காண
மேல்வரும் கீழவரும் பயின்று தேற
எண்குணத்தா னரியதிருக் குறளைத் தந்த
இனியதமிழ்க் குரியானை மொழிக ளெல்லாம்
எமக்கிலையே யிவன்பணியென் றேங்கா நிற்கும்
இணையறுமெய்க் குழவியினைப் புரக்கு மாறே. (9)

## இறைவன்

14. முறைமையினு லுலகமெலாம் தழுவத் தக்க
முப்பாலி னுட்பநல முறையே யாய்ந்த
முத்தமிழின் சங்கத்தார் புலவர் நீரே
முதன்மைபெறு தகவுடைய செய்யு ளீதே
இறைமைபெறு புகழ்பொருந்து பெரியீர் நுந்தம்
இயனூலின் விளக்கமுறும் பொருள்கள் தம்மை
இயன்றளவு மேற்கொண்டே யினியாஞ் செய்யும்
இயற்றமிழ்நூல் தழைத்திருக்க வருளல் வேண்டும்

நறைமலரில் வீற்றிருந்து நான்கு வேதம்
நவிற்றியருள் பகவனேயே நிகர்க்கு நும்மை
நான்முகனு ரெனப்புகழ்வே மென்ற வாய்மை
நன்குபெறு வள்ளுவனே நலத்தாற் காக்க
இறைவனெனும் பெயர்புனைதற் கியைபு கொண்டே
யெவையுமியற் றுதல்வலிய பெரிய னாகி
எம்மதத்துப் புகுந்துறையும் ஒருமைத் தேவன்
இருகழலை மனமார இறைஞ்சு வோமே. (10)

## மும்மைப் பொருள்

15 உலக வாழ்வு நிலைப் பதனுக்
குரிய துணையா மெழிலியினை
உயிர்க ணவத்தைப் பெறுநெறியே
யோவா துழைக்கு நிறைமொழியர்
நிலவு குணமாங் குன்றேறி
நின்ற புகழ்பூ ணந்தணளா
நிறைந்த மனத்தின் மாசிலனாய்
நிகழு மதுவே யாகுமெனக்
குலவு சிவிகை யூர்பவனும்
குனிந்தே யதனைப் பொறுப்பவனும்
குடத்தை யெளிதின் விளக்கு மொரு
கோட்பா டுடைய ததுவென்ன
அலகில் பெருமை பொருந்துவதா
அறையப் பெற்ற அறந்தன்னை
அணிந்து புனைந்து பராவிடுவாம்
அறஞ்சொல் புலவன் வாழ்வுறவே. (11)

# 2. செங்கீரைப் பருவம்

16. அகரவுயிர் முதலதா னகரமெய் யிறுதியா
யமையுமொரு தமிழ மொழியின்
அறியவுள் பொருளெலா மோர்துதல் விளக்கவே
யகரமுத னகரவிறுவாய்ப்
பகரவரு தமிழ்மறையை யுலகுகொள வருள்செய்த
பைந்தமிழ்த் தெய்வமகவே
பலர்பருக வமுதொழுகு செய்யவாய் மிச்சிதரு
பச்சைப் பசுங்குழவியே

மகரவணி சிரமசைய வதனமலர் கோட்டியே
    வண்கழல் மடக்கிவைத்து
மலரைவெலு மொருகர மெடுத்தொருகை யூன்றியே
    வாய்மலரி னுவுமசையச்
சிரகவி யிஃதென்று சிகழிகை குலுங்கவே
    செங்கீரை யாடியருளே
செந்தமிழ்த் திருநாடு செய்ததவ வுருவமே
    செங்கீரை யாடியருளே. (1)

17. மழலைமொழி யினிமையினை யுலகறிய நன்குசொல
    வந்தருளு பொய்யில்புலவ
மக்கள்திரு மெய்தொடுத லுடல்பெற்ற பேறென்ற
    வாய்மொழிப் புலவர்தலைவ
குழலினிசை யாழினிசை செவியுறுத லமுதென்று
    கூறுபவர் மக்கள்குழறும்
குதலைமொழி கேட்கிலாப் பாவியர்க ளெனநன்று
    கூறியருள் நாவின்மன்ன
தொழுதுனது திருவாயி னமுதொழுகு மழலைமொழி
    சொற்றருள்க சற்றருள்கெனச்
சுரர்பதமு மதியாத விபுதகண மன்பினொடு
    சூழ்ந்துபணி காட்சிகண்டாய்
தெழிகுரலு மினிமைமிகு தமிழ்மகளி னொருகுழவி
    செங்கீரை யாடியருளே
செந்தமிழ்த் திருநாடு செய்ததவ வுருவமே
    செங்கீரை யாடியருளே. (2)

18. வானவர்கள் பெறலரிய வமுதமாம் தமிழ்மொழியின்
    வாய்நிறைய மனமுமுருக
மக்களின மன்பினுற் சொலவுரிய ரினியமொழி
    வளநிறைந் துளவாகவே
யேனறிவின் மாந்தர்பல ரின்னாத மொழிபேசி
    யின்பமு மிழப்பரந்தோ
இனியகனி யுளவாக வின்னா வறுங்காய்கள்
    எய்தவிழை பவருமுளரோ
ஞானநெறி யுளதாக வீனநெறி நாட்டமுறு
    நரகினமு முலகிலுளதே
ஞாலமிசை வாழுபவ ருளதென்ப தில்லென்பன்
    நாசமுறு மலகையென்றே

தேனினிமை வெலுமினிய மொழிகளாற் புகல்குழவி
செங்கீரை யாடியருளே
செந்தமிழ்த் திருநாடு செய்ததவ வுருவமே
செங்கீரை யாடியருளே. (3)

19. உயர்வுதரு குணநிறையும் உலகவாம் பேரறிஞன்
உறுபெருஞ் செல்வமெல்லாம்
ஊருணியில் நிறைநீரை யொப்பவே யுலகுகொள
வுதவுமென் றருள்செய்தனை
பயனுதவு மரமொன்று குடிகணிறை நடுவூர்
பழுத்தது நிகர்க்குமென்றே
பண்புநிறை நல்லோனை யுறுசெல்வ மென்னவும்
பாரறிய நீசொற்றனை
மயறவிரு மமுதாய திருவள்ளு வப்பயனை
மக்களனை வோருமடைய
வள்ளன்மை கந்தாக வருளுநிற் குவமையென
வாய்த்தபொரு ளுலகினுளதோ
செயலரிய பணிபுரிய வுடலெடுத் தருள்குழவி
செங்கீரை யாடியருளே
செந்தமிழ்த் திருநாடு செய்ததவ வுருவமே
செங்கீரை யாடியருளே. (4)

20. உருவுகண் டெள்ளாமை யறிவுடைமை நிலவுலகி
லோடியுருள் பெரியதேரின்
உள்ளுறையு மச்சாணி பெரியவுருள் தாங்கியே
யுதவுவது காண்டுமென்றே
பெருமையொடு சிறுமையினை யவரவர்கள் கருமமே
பெறுவிக்கு மென்றருளினாய்
பிறிதொருசொல் வெல்லரிய சொல்லையே சொல்லுவது
பெருமையென நீவிதித்தாய்
அருமைகெழு மின்னநெறி யாவுநின் வாக்கினுக்
கமைவதனை நன்கறிந்தோ —
ஐயநின் குறளோது பேறுடைய ரினியோத
அறிவுநூ லில்லையென்றே
திருவுடைய பிறவிபெறு வள்ளுவக் குடியாள
செங்கீரை யாடியருளே
செந்தமிழ்த் திருநாடு செய்ததவ வுருவமே
செங்கீரை யாடியருளே. (5)

21\. அண்டரு மோதிய வாரிய மவருணு
　　மமுதினு மினியதமிழ்
ஆகிய விருமொழி யொப்புமை தெளிவுற
　　வாய்வுறு நினைவுடையோர்.
பண்டரு நான்மறை யுள்ளதை யாரியப்
　　பைந்தமிழ் வள்ளுவநீ
பாடிய் திருமறை யுள்ள தெனத்தெளி
　　பண்பினை நன்குணர்வாய்
உண்டென வோதிய பொருள்க ளனைத்தையும்
　　உள்ளுறை யெனவுடைய
உத்தர வேத மிசைத்தருள் நாவல
　　ஒப்பறு மெய்ப்புலவ
தெண்டிரை பணிகொளு மொண்டிறல் நான்முக
　　செங்கோ செங்கீரை
செந்தமிழ் நன்மகள் தந்த தவச்சிசு
　　செங்கோ செங்கீரை. (6)

22\. அறமென லாகிய தகளியில் முறையுற
　　வமைதிரி பொருளெனவே
அன்புறு மின்பெறு நெய்யை நிறைத்தனை
　　யாய்ந்துறு சொற்கனலாற்
குறளென நன்கமை தண்டினி லேற்றிய
　　கோதில் விளக்கதனாற்
குவலயம் வாழ்பவர் நெஞ்சக மூடிய
　　குவியிரு ளோட்டினையே
மறவியி னழியினும் வேதியன் மறைமொழி
　　மறுவலு மோதிடலாம்
மற்றவ னன்னெறி வழுவுறு மாயிடின்
　　வாழ்வை யிழக்குமெனுத்
திறமுற வோதிய மழலைய வள்ளுவ
　　செங்கோ செங்கீரை
செந்தமிழ் நன்மகள் தந்த தவச்சிசு
　　செங்கோ செங்கீரை.

23\. ஆற்ற லழிந்திடு மென்றிறை யருளிய
　　அருமறை நான்கினையும்
அந்தண ரேட்டினி ரெழுதலர் சுருதியி
　　னடைவுற வோதுவரே

தோற்றிய பொருடெளி யறிவில ரோதுக
சொற்பொரு ணுட்பமுணர்
தூயவ ரோதுக நீயருள் வாய்மொழி
சோர்வது முண்டுகொலோ
ஏற்ற மெனைத்துள செய்யுளி னெறியவை
யாவையு மெய்துறவே
இட்டனை வாயுறை வாழ்த்தெனு மழலையில்
என்பது மெய்யலவோ
தேற்றிய பொருண்மொழி யருளிய நாவல
செங்கோ செங்கீரை
செந்தமிழ் நன்மகள் தந்த தவச்சிசு
செங்கோ செங்கீரை (8)

24. தவநெறி வேட மறைந்தன னல்லவை
தான்புரி பாவியினைத்
தனதுடல் புதவின் மறைந்தொரு புட்சிமிழ்
தந்திர மேபுரியும்
அவநெறி வேடனி னிகரென வோதிய
அறிவர் சிகாமணியே
அகமுறு தூய்மை நிரம்புத லின்றியே
அணிகெழு புறவொளியாற்
குவலயம் வாழ்பவர் புறனுறு செம்மைகொள்
குன்றி நிகர்ப் புறுவார்
குன்றியின் மூக்குறு கருநிற மவரது
குறையை விளக்குமெனுச்
சிவநெறி பேசிய தவமுதல் வள்ளுவ
செங்கோ செங்கீரை
செந்தமிழ் நன்மகள் தந்த தவச்சிசு
செங்கோ செங்கீரை. (9)

25. எவ்வகை யாகிய பொருள்களு முள்ளன
எந்தை திருக்குறளில்
இல்லன பொருள்வள முலகிலு மில்லென
லேதுவி னோதினர்காண்
அவ்வகை மெய்தெளி நாவலர் வாய்மொழி
யமைதியை நன்குணர்வார்
அரிய பலப்பல நூல்களை யோதியும்
அறிவரு மெய்ப்பொருளை

இவ்வகை யெளிதினி லடைவுறு துணிவொடு
மீடு மெடுப்புமிலா
இயன்மொழி யாகிய நினதுரை தேறுவர்
யாரும் நினைத்துணராச்
செவ்வகை தேறிய மெய்யுணர் பாவல
செங்கோ செங்கீரை
செந்தமிழ் நன்மகள் தந்த தவச்சிசு
செங்கோ செங்கீரை. (10)

## 3. தாலப் பருவம்

26. உணர்தற் குரிய பெரும்பொருளை
யுணரு மறிவு படைத்தவர்முன்
ஓதப் புகுதல் வளர்ப்பயிரால்
உயரும் பாத்தி நீர்சொரிதற்
கிணையென் றுரைத்தி யங்கணத்தி
னினிய வமிழ்து கவிழ்த்ததுவே
இசைக்கும் பொருளி னலமறியார்க்
கெதிரே யிருந்து கோட்டிகொளும்
குணமென் றிசைத்தி மகிதலத்தே
குழுமி வாழு முயிர்க்கெல்லாம்
கொள்ளக் கிடையாக் குறள் கொடுத்த
குறையா வமுதப் பெருங்கடலே
மணமுஞ் சுவையுங் கெழுமழலை
வாயாய் தாலோ தாலேலோ
மயிலா புரியின் வாழ்வுகக்கும்
வள்ளால் தாலோ தாலேலோ. (1)

27. நுண்மை தெளியு மவையஞ்சி
நூலின் பொருளை விளக்கறியார்
நூல்கள் பயின்று பலவாண்டு
நோற்றுப் பெற்ற பயனென்னே
திண்மை செறிந்த நெஞ்சமிலார்
தெவ்வர் நிறையும் சமர்க்களத்தில்
சென்று வாளை விதிர்ப்பதன்ற்
சிறுமை பெறுதல் துணிவென்றுய்

பெண்மை யுருவப் பேய்களிடும்
பீழை யேவல் புரிந்திருக்கும்
பேதை தன்னி ஞண்முள
பெண்ணே பெருமை யுடைத்தென்ருய்
வண்மை செறிந்த செழியர்தமிழ்
மறையோய் தாலோ தாலேலோ
மயிலா புரியின் வாழ்வுகக்கும்
வள்ளால் தாலோ தாலேலோ. (2)

28. குன்ற மேறி யானைப்போர்
குனிந்து காணுஞ் செயனிகர்க்கும்
குறைவில் செல்வம் திரட்டிவைத்துக்
குறித்தோர் வினையின் முயலுபவன்
நின்ற முயற்சி யெனவிளக்கும்
நிறைந்த வாய்மைத் தவச்செல்வ
நிகழ்த்து சொல்லின் வணக்கத்தை
நினையே பகைப்பா ரிடைக்கொள்ளேல்
கன்று வில்லின் வணக்கந்தான்
கடிதே தீங்கு குறிக்குமெனக்
கனிவாய் மலர்ந்து பொருளருளும்
கவிஞ ரினத்து மணிவிளக்கே
மன்றின்றிஞர் செவி யமுதாம்
வாக்காய் தாலோ தாலேலோ
மயிலா புரியின் வாழ்வுகக்கும்
வள்ளால் தாலோ தாலேலோ. (3)

29. பயிலுந்தோறும் பண்புடையார்
பரிசு விளங்கு தொடர்பதுதான்
பயின்று பயின்று நவிற்றும்
பழமை சான்ற பெருநூலின்
இயலு நயங்க ளொன்ருென்ருய்
எழுந்தே விளங்குந் திறநிகர்க்கும்
எனவே இசைத்த தத்துவத்தின்
இசைந்த மறையின் வெளிப்பாட்டை
உயலு முலக நலமுமருள்
உனது செய்யு ளூட்புகுந்தே
ஒவ்வோர் மொழியுந் துருவுவதாய்
உணர- வமைத்த மெய்ப்புலவ

மயலு மனத்தார்க் கொளிவிளங்க
வந்தாய் தாலோ தாலேலோ
மயிலா புரியின் வாழ்வுகக்கும்
வள்ளால் தாலோ தாலேலோ. (4)

30. பெறுதற் கரிய அகத்தூய்மை
பேணுத் தவத்தின் வேடத்தான்
பெற்றப் புலித்தோல் போர்த்ததுவாய்ப்
பிறர்கண் காணப் புல்மேய்ந்த
சிறுமைக் குரிய ளுருமெனச்
செவ்வி தமைந்த கணைபுரியும்
செயலாற் கொடிது கோட்டுருவம்
செறியும் யாழோ செயல்நலத்தால்
உறுமெய்ப் பெருமை யெனவுணர்த்தி
உள்ள நலத்தின் றகைவிளக்கும்
உவமை கடந்த் பெரும்புலவ
ஓதக் கருதி வருபவர்கள்
மறுமைப் பயனை யடையவருள்
மதியாய் தாலோ தாலேலோ
மயிலா புரியின் வாழ்வுகக்கும்
வள்ளால் தாலோ தாலேலோ. (5)

31. கூத்த ரவைக்களம் வந்து புகுந்து
குவிந்த குழாமெனவே
கூடுறு நாளின் வெறுக்கை வளர்ந்து
குணங்கள் விளக்கிடுமே
நீத்தல் தொடங்கிய நாளினி லன்னது
நின்று நிறைந்தகுழாம்
நீங்கல் நிகர்ப்புற நீங்கி யழிந்திடல்
நிச்சய மென்றருள்வாய்
பாத்து நலம்பெறு முண்டியை யுண்பவர்
பசியெனு மெய்ப்பிணியாற்
பையு ளுழப்பது மில்லை யெனத்தெளி
பரிசு விளக்குவதாற்
சாத்திர மெய்ம்மை யுணர்த்திய வள்ளுவ
தாலோ தாலேலோ
சங்கத் தமிழ்வள ரப்பொழி பைம்புயல்
தாலோ தாலேலோ. (6)

32. தலையி னிறைந்துள நிலைமையி னெய்யொடு
சாந்தணி கருமயிர்தான்
தலையி னிழிந்தது மெவரும் வெறுத்திகழ்
தன்மையை யெய்துதல்போல்
நிலையி னுயர்ந்தனர் பலர்புகழ் வாழ்வினில்
நீடுற வாழ்பவரும்
நிலையி னிழிந்தது மடைவுறு சிறுமைகள்
நீர்மையி னேதியவ
மலையி னுயர்ந்துள மாண்பினை யெய்துவன்
வந்துறு தன்னிலையில்
வினைதிரி பின்றி யடங்கிய கொள்கையின்
மனமுடை யானெனவே
தலைமை பொருந்திய மொழிபுகல் .வள்ளுவ
தாலோ தாலேலோ
சங்கத் தமிழ்வள ரப்பொழி பைம்புயல்
தாலோ தாலேலோ. (7)

33. குடம்பை தனித்துற முள்ள மதிற்சிறை
கொண்ட சிறைப்பறவை
கூடு மினத்திடை நாடி யொழிந்திடு
கொள்கையை யொக்குமரோ
உடம்பொ டுயிர்க்குள நட்பென வோதி
யுறங்கி விழிப்பதையே
உயிர்கள் பிறப்ப திறப்பதை யொப்பென
வுய்த்துணர் வித்தனையே
மடங்கொள் மனத்தினர் துன்ப மிகுத்துள
வாழ்வுள் மயங்குவதை
வந்த தனைத்து மிழந்து மயங்கிய
வல்லின் விளக்கினையே
தடங்கொ ளிருக்கை பெருங்குறள் நாவல
தாலோ தாலேலோ
சங்கத் தமிழ்வள ரப்பொழி யும்புயல்
தாலோ தாலோ. (8)

34. கொக்கை நிகர்ப்ப வடங்குக தம்வலி
கூம்பிய பருவமதில்
கூடிய நாளினில் மற்றது குத்திய
குத்தை நிகர்ப்புறுக

தொக்க விருட்பொழு தோங்கிய கூகை
தொலைந்திடு நாட்டமொடு
சூழ்ச்சிசெய் காக்கை பகற்போ திற்சமர்
தோற்றி வளைத்திடுமே
மிக்க சிறப்புள வல்லர சாயினும்
விரவல ரோடெதிர
வில்லொடு மெய்த்துணை வாய்ப்புறு காலம்
விழைந்து பொறுத்திடுக
தக்க சமர்த்திற மீதெனு நாவல
தாலோ தாலேலோ
சங்கத் தமிழ்வள ரப்பொழி யும்புயல்
தாலோ தாலேலோ. (9)

35. கேட்டினு முளதொரு பெறலரு நலமது
கெடுநிலை யுற்றளவே
கிளைஞரின் மனமுறு மெய்யுற வதனொடு
கிழிபடு பொய்யுறவை .
நீட்டி யளப்பதொர் கோலென வங்கது
நின்று விளங்குறுமே .
நிறைவுறு கிளைஞரொ டாதுல ரேதிலர்
தேடி நெருங்குறவே
நாட்டினில் நலமொடு வாழ்வுறு நாளினில்
நன்கு பொருந்துபவர்
நல்குர வுற்றதும் வேறென லாவது
ஞால மறிந்ததெனச்
சாட்டிய மெய்யறி நூறரு நாவல
தாலோ தாலேலோ
சங்கத் தமிழ்வள ரப்பொழி பைம்புயல்
தாலோ தாலேலோ. (10)

# 4. சப்பாணிப் பருவம்

36. நெடியபுனல் வாழ்முதலை புலிகரடி களிறுகளை
நேருறப் பொருதுவெல்லும்
நிலமீது வந்ததெனின் ஞமலியு மதைப்பொருது
நிலைகலக் கிடவல்லதாம்

அடுபடையின் வலிசான்ற பகைமன்னர் போர்துகினும்
அருமினையோ டகழிறுடும்
அரண்வலிய தன்னுட்டி னகம்வாழும் வேந்துதனை
யமர்புரிந் தவர்வெல்கிலார்
கொடியபடை வேலின்று வென்றியினை நல்குவது
கோலதூஉங் கோடாதெனின்
குடிகள்மன மின்பமுற முறைபுரியு மன்னவன்
கொற்றமே கொள்ளுமென்றுய்
தடமலரு பலகையினி லிறைகொண்ட புலவனே
சப்பாணி கொட்டியருளே
தமிழ்மகளின் முடிமணியி ஞெளிர்குறளை யருள்தேவ
சப்பாணி கொட்டியருளே. (1)

37. வானமது பொழிகின்ற மழையின்வள நோக்கியே
வாழுவன உலகமெல்லாம்
மன்னனது செய்யகோ லாட்சியினை நோக்கியே
வாழ்வுறுவர் குடிகளாவார்
தானநெறி தவநெறிகள் வானின்வள மின்றெனிற்
றரணியிடை வாழ்வுகொள்ளா
சாந்தநெறி ஞானநெறி தருநூல்கள் தோன்றுவது
தக்கவர சின்றியுண்டோ
மானமொடு வாழுவதும் யாழ்குழ லிசைப்பதுவும்
வாக்குவள மெய்துதிறமும்
வள்ளன்மை யோர்குவது நல்லரசி னன்றியே
மற்றெங்கு வாய்ப் பதுண்டே
தானமுய ரரசினிலை யிதுவென்று புகல்புலவ
சப்பாணி கொட்டியருளே
தமிழ்மகளின் முடிமணியி ஞெளிர்குறளை யருள்தேவ
சப்பாணி கொட்டியருளே. (2)

38. குன்றிமணி யளவினிற் குன்றுவன புரியினும்
குன்றனைய மாண்புடையரும்
குன்றுவது மெய்ம்மையே தம்மையிகழ் பவர்முன்பு
கும்பிட்டு நிற்குநிலையிற்
பொன்றுலக வாழ்வின்ப முள்ளதோ வறிகிலேம்
புகழில்லை புண்ணியத்தாற்
புத்தேளிர் வாழுநாட் டுய்யுமொரு வாழ்வில்லை
பொன்றுத வாழ்வுமில்லை

மன்றவொரு மயிர்நீப்பின் வாழ்கிலாக் கவரிமான்
  மானுமுயர் மானமுடையார்
வாழ்வினிசை நோக்கியே மானம்வரி னுயிர்விடுவர்
  மானவாழ் வீதென்றனை
தன்றலைமை யேட்டிலிடு கையினு லடைகுழவி
  சப்பாணி கொட்டியருளே
தமிழ் மகளின் முடிமணியி னொளிர்குறளை யருள்தேவ
  சப்பாணி கொட்டியருளே. (3)

39. சால்பிற் குரியதோர் கட்டளை யாவது
  சான்றவர் தம்மைநிகர்
தக்கவர் பாலுறு மெய்ம்மைய தோல்விகள்
  தம்மை நிகர்ப்புறவே
தோல்விக் குரியவ ரல்லவராகிய
  துலையற் றவருழியும்
தோல்வி யடைந்தவர் போல வடங்குறு
  தூய்மை யெனச்சொலியே
மால்பற் றியவுள னேடு மிருதள
  வன்பொடு புரிகுநரை
வாழ்த்திய நாவொடு மினியன புரிவது
  மாண்பென வருள்புலவ
கோல்பெற் றுயரர சியல்மொழி நாவல
  கொட்டுக சப்பாணி
குறைவற் றுயர்பொது மறைசொற் றருள்பவ
  கொட்டுக சப்பாணி. (4)

40. ஒன்றென வோதுவ ரொருசிலர் பலவென
  வோதுவர் பிறர்சிலரே
உண்டென வோதுவர் இன்றென வோதுவர்
  உளதில தென்பர்களே
அன்றென வோதுவ ராமென வோதுவர்
  அறுவகை மதநெறியர்
அனைவரு மொற்றுமை முடிபுறு பொருள்பிற
  அவனி தலத்திலையே
நன்றென வுலகறி ஞான விளக்கென
  நாட்டிய மறையெனவே
நாவல் நினதருள் வாய்மொழி நூலினை
  நவிலுவ ரனைவருமே

குன்றென வளர்வுறு புகழ்பெறு வள்ளுவ
கொட்டுக சப்பாணி
குறைவற் றுயர்பொது மறைசொற் றருள்பவ
கொட்டுக சப்பாணி. (5)

41. அரநிகர் கூரிய அறிவின ராயினும்
அறநெறி நூல்புகலும்
அமைதியு மக்களி னன்குறு பண்பும்
அமைந்தில ராமனிதர்
மரநிக ராவ ரெனத்தெளி வோதிய
வாய்மொழி நாவலவ
மக்களின் மெய்ம்மைய பண்புணர் வருதலின்
வாழ்வுறு மாலுலகம்
வரமுற வன்னவர் வருகில ராமெனின்
மண்ணி னிழிந்ததுதான்
மாய்வது வாகு மெனத்துணி வொன்றிய
வாக்கிய மருள்புலவ
குரைகழல் மறவரின் மறநவில் பெருமைய
கொட்டுக சப்பாணி
குறைவற் றுயர்பொது மறைசொற் றருள்பவ
கொட்டுக சப்பாணி. (6)

42. வேலான் வலிய மறவனேயும்
விறலா னமரின் விளிவித்து
வெளிய கோட்டிற் றுங்கிவரும்
வீரத் ததுகட் களிற்றினேயும்
காலாழ் களரி னரியடுமால்
கால்வல் நெடுந்தேர் கடலோடா
கடலி னோடு நாவாய்கள்
கடவி னுலு நிலத்தோடா
பாலான் வருவ பகையெனினும்
பரிந்து முறைமை தெளித்துணர்த்தும்
பழையோர் மொழிகேட் டிடமறிந்து
பாராண் மன்னர் நிலேபுகலும்
சீலா புலவர் சிகாமணியே
தேவா கொட்டுக சப்பாணி
செழுமைத் தமிழின் மறைமொழிந்த
செல்வா கொட்டுக சப்பாணி. (7)

43. மாலுங் குறளாய் மாவலிமுன்
வந்து நின்று வளர்ந்திரண்டு
மாண்ட வடியால் வெள்ளியொடு
மற்ற வவுணர் மயங்கி நிற்க
ஞால முழுதுந் நயந்தளந்தான்
நாவின் செல்வ நீபிறந்து
நயமும் சுவையும் செறிந்தமைய
நவிலும் குறள்வெண் பாவடியால்
கால மறிந்த பொருளனைத்தும்
கணித்து வையத் திருக்குமவர்
கருதும் பொருள்க ளெலா மளந்து
கவினக் கொடுத்த வண்மையொடு
சீல நலத்தை யெவர் புகழார்
தேவா கொட்டுக சப்பாணி
செழுமைத் தமிழின் மறைமொழிந்த
செல்வா கொட்டுக சப்பாணி. (8)

44. வாள்போ லெறிந்துள புறப்பகைவர் தஞ்செயல்
மதித்தறியும் வழியுண்மையால்
மற்றவரை யஞ்சற்க படைகளொடு தாங்கியவர்
வருநெறியின் முந்துசெலவாம்
கேள்போல வுறுமகப் பகைவர்தம் தொடர்பினுற்
கெட்டவர சொருகோடியே
கிளரரம் பொருதபொன் போலவுட் பகையினுற்
கேடில்குடி தேய்ந்தழியுமே
ஆள்போ லிருந்துசிலர் வல்லரசை யுட்பகையின்
அழிவித்த கதைகளுளவே
அகம்பொதியு முட்பகையு மெட்பகவி னன்னதே
யாயினும் கேடுதருமே
கோள்போலு முட்பகையை யஞ்சுகென வருள்புலவ
கொட்டியருள் சப்பாணியே
குளிர்தமிழின் மறைதந்த மாதானு பங்கியே
கொட்டியருள் சப்பாணியே. (9)

45. இன்மையின் வருந்துபவர் நலமெய்த வுதவிலா
திவறியான் வைத்தசெல்வம்
எழில்கனிந் தொழுகுமொரு பெண்ணணங் கிளமையினி
லேற்றமண மெய்திடாது

பொன்மகளை வெல்லுநலம் வறிதாக மூத்ததொரு
புதுமையை நிகர்க்குமென்றுய்
பொழிவதும் துய்ப்பதுவு மறிகிலான் றேடுபொருள்
போற்றுமொரு கோடி யெனினும்
நன்மைவிளை வின்மையா லொன்றுமில தாமென
நவிற்றியருள் வண்மையாள
நானிலமும் வானுலகு மரியபொரு ளெனவெண்ண
ஞானநெறி தந்ததலைவ
கோன்மலியும் வேல்வென்றி வாள்வென்றி யருள்புலவ
கொட்டியருள் சப்பாணியே
குளிர்தமிழின் மறைதந்த மாதானு பங்கியே
கொட்டியருள் சப்பாணியே. (10)

## 5. முத்தப் பருவம்

46. தெள்ளமுத மலிசுவைத் தெனினுமதை யயிலுபவர்
தேவரெனு மொருசிலவரே
செறிவுநய மினிமைசுவை கனிவுவள மமைநினது
திருவாயி னமுதையுலகில்
உள்ளவர்க ளெத்திறவ ரெனினுமவர் மனமுருகி
யுண்டுமகிழ் வெய்தலுளதே
உம்பர்வரு ஞாயிறுடு திங்களெனு மிவைமூன்று
முலகிலுள புறவிருளையே
வெள்ளமென வொளிதருங் கதிர்களா லெரிசெய்து
வென்றியொரு வாறுபுனையும்
வேதமென வருநினது வாக்கினு லமைகின்ற
வியன்முத்த மூன்றுபாலும்
தெள்ளியுணர் பேறுடைய ரகவிருளை யோட்டுவன
செய்யவாய் முத்தமருளே
தெளிவுமலி தமிழ்மறையை யுலகுகொள வருள்குழவி
செய்யவாய் முத்தமருளே. (1)

47. பசுவினது நன்பால் கலந்தீமை யாற்கெடும்
பரிசுபோற் பண்பிலாதான்
பாடுபட் டீட்டிய பெருஞ்செல்வ மெவ்வகைப்
பயனுமற வறிதழியுமே

இசைவளர நகல்வல்ல ரல்லார்க்கு ஞாலமிஃ
திரவுபோற் பகலுமிருளும்
இனியநய ஞெடுநன்றி புரிபயனை யடைபவர்தம்
இயல்புபா ராட்டுமுலகம்
வசைதரு மிகழ்ச்சியுரை நகையுள்ளு மின்னுது
வகைதெரிந் தொழுகுவோர்யார்
வளருமொரு பகையினும் பண்புள தெனச்சொற்ற
மாதானு பங்கிமதலாய்
திசைகளொடு விண்டலமு மண்டலமு மறிகின்ற
செய்யவாய் முத்தமருளே
தெளிவுமலி தமிழ்மறையை யுலகுகொள வருள்குழவி
செய்யவாய் முத்தமருளே. (2)

48. மனைநிறைய வீட்டிய பெருஞ்செல்வ முண்ணுது
வைத்திறந் தவனையுலகம்
வாழ்த்துவது மில்லையே புகழுவது மில்லையே
வசைகூறி யிகழ்வதுண்டே
எனைவகைய வின்பமும் பொருளினு மெனவெண்ணி
யீட்டுமொரு நாட்டமுடையான்
இசைவேண்டி யீகிலா னெனினவன் ரேற்றமே
யிருநிலப் பொறையாகுமே
தனையொருவர் நச்சாது நிலமிசையில் வாழுவோன்
தனதெச்ச மெதனையே
தான்கருத வல்லனு மன்பின்றி யறனறத்
தற்செற்று வைத்தபொருளைத்
தினையளவு மொழியாது பிறர்கொள்வ ரென்றுமொழி
செய்யவாய் முத்தமருளே
தெளிவுமலி தமிழ்மறையை யுலகுகொள வருள்குழவி
செய்யவாய் முத்தமருளே. (3)

49. பொருளின் செல்வம் கலைச்செல்வம்
பொருந்தப் பெறுவார் சிலராகப்
பொருந்தா தவரே பலராகப்
புவியி னமைந்த வதற்கேது
மருளின் வலியைக் கெடுத்தருள
வல்ல மெய்ம்மைத் தவநெறியில்
மருவி யிருந்தார் சிலராக
மருவா தவரே பலராக

இருளி னியங்கு முலகநிலே
இயல்பென் றளந்து தெளிவிக்கும்
இணேயொன் றில்லாத் தவமணியே
இமையோர் பருகாத் தமிழமுதம்
தெருளின் மதித்துப் பருகிமகிழ்
தேவா தருக முத்தமே
செம்மைத் தமிழின் மறைமொழிந்த
செல்வா தருக முத்தமே. (4)

50. உற்ற நோயை நோன்றுகொளல்
உயிர்கட் குறுகண் செய்யாமை
உரைக்கப் புகுந்தா லவ்வளவே
யுண்மைத் தவத்தி னுருவமெனச்
சொற்ற புலமைத் தவச்செல்வ
சுடவே சுடரும் பொன்போலத்
துன்பஞ் சுடவே நோக்கிற்பார்
தூய்மை யொளியைப் பெறுவரென
வெற்றி விளேக்கும் தவந்தானும்
வேண்டி முன்னேப் பிறவிகளில்
மிக்க தவத்தை யுஞற்றினரை
மேவும் பிறர்பால் மேவலதே
தெற்ற விதனே யுணர்கவெனத்
தெளித்தாய் தருக முத்தமே
செம்மைத் தமிழின் மறைமொழிந்த
செல்வா தருக முத்தமே. (5)

51. சூழு நெறியிற் சூழாமே
சூழ்ச்சித் துணேயை மதியாமே
தோற்றஞ் சான்ற வரசுமுறை
துணியு மதியு மடையாமே
வாழு மரசன் தனதறிவால்
வளரும் கொடுமை விளேப்பவனுய்
வளஞ்சால் நாட்டின் குடிமகிழ
வகுத்த கோலும் கோடுமெனின்
கூழுங் குடியு மொருங்கிழக்கும்
கொடிய வில்லிற் காற்றுது
குடிகள் அழுத கண்ணீரே
கோமான் செல்வம் தேய்த்தழித்துப்

போடும் படையா மெனப்புகன்ற
புலவா தருக முத்தமே
பொதுமெய்ம் மறையைத் தமிழ்க்கருளும்
புலவா தருக முத்தமே. (6)

52. ஆவு மினிய பயன்குன்றும்
அறுமெய்த் தொழிலோர் நூன்மறப்பர்
அரசு நெறியின் முறையறிந்தே
அவனி காவா னரசனெனின்
மேவு முறைமை செய்யறியா
வேந்தன் கோலின் கீழ்ப்படினே
விழையு முடைமை யின்மையினும்
மிகுந்த வின்னல் விளைத்திடுமே
தூவு மழையின் துளியின்மை
சூழு முலகிற் கெற்றற்றே
சுடர்வேன் மன்ன னளியின்மை
துயர முயிர்கட் கெனப்புகலும்
பூவின் மணங்கொள் திருவாயாற்
புலவா தருக முத்தமே
பொதுமெய்ம் மறையைத் தமிழ்க்கருளும்
புலவா தருக முத்தமே. (7)

53. அறிவிய லுறுதிய பொருளினை யுணருவ
னுமென வோதுவதே
அருளில னறவினை புரிவதி னிகரென
அன்பின் விளக்கினையே
உறுபொரு ளிலவரு 'மலருவ ரொருபொழு
துத்தம நிலைபெறவே
உயரரு ளுளமில ரழிவது திரமென
வுய்த்துணர் வித்தனையே
நெறியற வெளியவர் துயருறு வினைசெய
நெஞ்சி னினைத்தளவே
நிறைவுறு வலியினர் முனர்நின திழிவினை
நினைகென வோதினையே
முறைநெறி யுலகின ரறிவுற வருள்பவ
முத்த மளித்தருளே
முதுமறை தமிழினி லருளிய குறள்முனி
முத்த மளித்தருளே. (8)

54. எதுபொரு ளெனவெவர் புகல்கினு மதனக
மியைபுறு மெய்ப்பொருளே
இனிதினி னுணருவ துயர்வுறு மறிவென
வேதுவி ஞேதினையே
புதுமையி னறிவுறு பொருள்பிற ரெளிதுறு
போத முறத்தெளிவே
புகறலு மவர்முக நுணுகிய பொருடெளி
புலமையும் விண்டனையே
இதுதகு மெனவுல கெதுநினை வுறுமதை
இயல்புற வுணருவதே
இணையறு மறிவென முறைமுறை யருளிய
இனிய மொழிப்புலவா
முதுமையு மிளமையு மடைவரு நிலையினை
முத்த மளித்தருளே
முதுமறை தமிழினி லருளிய குறள்முனி
முத்த மளித்தருளே. (9)

55. நெருந லுளவொருவ னிதுபக லிலனெனு
நிலையின துலகமென
நிலையறு முலகினி லுழல்பவர் பலபல
நினைவுகள் நினைவரென
வருவது பகலல வுயிர்கவர் திறமுள
வாளென வுணர்கவென
மறைதரு பொருள்களை யெளிதினி லறிவுற
வாயுறை வாழ்த்தருள்வாய்
அருமைய பொருள்களு ளரியது பெரியரை
யடைவுறு முறவெனவே
அருளென வருகுழ வியுமுயர் பொருளெனும்
அன்னையின் வளர்வதுவே
முரணற விவைகளை யறிகென மொழிபவ
முத்த மளித்தருளே
முதுமறை தமிழினி லருளிய குறள்முனி
முத்த மளித்தருளே. (10)

# 6. வாரானைப் பருவம்

56. சங்கப் புலமைத் தலைமைகொளும்
சாத்தர் தலையிற் குத்தொழியத்
தகுந்த மருந்தா முப்பாலைத்
தருமா முனியே வருகவே
சங்கப் பலகை யிடந்தந்த
தனிமைப் பெருமை பெறுங்குறளைத்
தமிழத் திருநா டுடையார்க்குத்
தகவே யருள்வாய் வருகவே
துங்கப் பொருளின் செழுமைகளும்
தூய்மைச் சொல்லின் சுவைநயமும்
துணியும் புலவ ரெடுத்தாளும்
சொல்லின் செல்வன் வருகவே
வங்கத் தமிழும் பொன்னனைத்தும்
வரவே யழைத்தாய் வருகவே
வளமைத் தமிழின் மறைமொழிந்த
வள்ளால் வருக வருகவே. (1)

57. அகலா ரணுகார் தீக்காயு
மவரே போல்க விகல்மன்னர்
அவையிற் சேர்வா ரெனப்புகன்ற
அறிவின் செல்வா வருகவே
நகையே செவியிற் சொல்லுவதே
நணுகா தவித்துப் பயிலகவே
நலஞ்சால் பெரியா ரகத்தெனவே
நவிலும் புலவா வருகவே
தகவே குறிப்பிற் குறிப்புணரும்
தகைமை சிறந்தா ரரசர்பணி
தாங்கிப் புரியும் திறத்தரெனச்
சாற்றுந் தமிழா வருகவே
மகவே பெருமைச் செல்வமென
வகுத்தாய் வருக வருகவே. (2)

58. இலமென் றுடலஞ் சோர்ந்தனராய்
இயங்கு முள்ள மடிந்தனராய்
யாதும் புரியும் கருத்திலராய்
இருப்பார் தம்மைக் கண்டளவில்

நிலமென் றுரைக்கு நல்லணங்கு
நீரைப் பொழியு மழையிருக்க
நிறைந்து வளரும் வித்திருக்க
நிமிர்ந்து கடவு மேரிருக்க
நலமொன் றறியீர் வறியீராய்
நாளைக் கழிப்பீர் நீரெனவே
நகுமென் றுண்மை யுலகறிய
நவின்ற பொய்யா மொழிப்புலவ
குலமென் றறிய வொன்றுமிலாக்
குணவான் வருக வருகவே
குலவுந் தமிழின் முடிபுனைந்த
கோமான் வருக வருகவே. (3)

59. இரக்கப் புகுதல் இழிபெனவும்
இரந்தே வாழ்க வெனவுலகம்
இயற்றி யவனே படைத்திருப்பின்
இரவா லழிக வவனெனவும்
இரக்கப் பெருக்கா லிசைத்தருளும்
இசையின் செல்வா இரப்பதுவே
எமக்காம் பணியென் றெடுத்தீரேல்
இரப்ப னுமையா னிரப்பவர்க்கே
காக்கும் குணத்தார் பாலடைந்து
கையை விரித்துப் பலபேசிக்
கண்ணீர் சொரிந்து நில்லாதீர்
கரவே யிரவின் பகையென்றாய்
குரக்குக் குணத்து மனமுருக்கும்
குறளாய் வருக வருகவே
குலவும் தமிழின் முடிபுனைந்த
கோமான் வருக வருகவே. (4)

60. கறுவிச் சினந்தவர்கள் பெறுகிற்கு மின்பநிலை
கடிதிற் பறந்தொழியுமே
கனிவிற் பொறுப்பவர்த மருமைப் புகழ்க்கனவு
கருதிற் கணித்தலரிதே
அறிதற் குறும்பொருளை யறியப் பெறுஞ்சிறுவர்
அடையப் பிறந்தசிலரே
அரிதிற் பெருந்திருவை யெளிதிற் கொளும்பெருமை
அமையப் பொருந்துபவரா

பெறுதற் கமைந்தநல னினைவிற் கொளுஞ்சிறியர்
பெருநட் பகன்றொழிகவே
பெருமைக் கமைந்ததுணை கருமத் திருந்ததது
பிறரிற் பொருந்தவிலையே
மறுவற் றுயர்ந்தநெறி யிதுகற்க வென்றருளு
மதுரைக் கிழான்வருகவே
மறையைக் கடைந்துதமி ழமுதைப் பொழிந்தருளு
மகிமைப் பிரான்வருகவே. (5)

61. பொருளிற் சிறந்தவரை யுலகிற் பெருந்தலைமை
புகலத் துணிந்தடைவரே
பொருளற் றழிந்தவரை யிகழத் தகுந்தநிலை
புனைவித் தகன்றொழிவரே
அருளிற் புகுங்குழவி பொருளிற் றருஞ்செவிலி
யமையக் கிளர்ந்துவருமே
அருளிற் கிளர்ந்தவரை யிருளற் றுயர்ந்தவுல
கடைவிக்கு மென்பதறமே
தெருளத் துணிந்தபொருள் நினைவிற் பொருந்துநிலை
சிதறப் புகுந்தபிடியே
சிதையப் புரிந்துபொருள் மறமற்று நின்றநெறி
திரளப் பயின்றுமகிழ்வீர்
மருளற் றியன்றநல நெறிபற்று கென்றருளும்
மதுரைக் கிழான்வருகவே
மறையைக் கடைந்துதமி ழமுதைப் பொழிந்தருளு
மகிமைப் பிரான்வருகவே. (6)

62. இருமைத் திறம்பெறுவ துயிர்கட் கமைந்தவினை
யெனவுய்த் துணர்ந்துமொழிவான்
இயல்பிற் பொருந்துகினு முயற்விற் சிறந்தநிலை
யெவருக்கு மொன்றவிலையே
திருவிற் சிறந்தநிலை மருவப் புரிந்தவினை
சிலருக் கமைந்துமுளதே
தெளிவிற் சிறந்தவறி வமையப் பொருந்துநிலை
சிலரைச் செறிந்துமுளதே
பரிவிற் புகுந்திடினும் வருதற் கியன்றவல
பயிலம் பொருந்தவிலையே
பசையற் றகன்றிடினும் இசைதற் கமைந்தவவை
பழகற் கிணங்குமெனவே.

வரிசைத் திறந்தெளிய நெறியைப் புகன்றருளு
மதுரைக் கிழான்வருகவே
மறையைக் கடைந்துதமி ழமுதைப் பொழிந்தருளு
மகிமைப் பிரான்வருகவே. (7)

63. வகுத்தான் வகுத்த வகைப்படியே
வகுத்த வினையின் பயன்களெலாம்
வருத லுளவாம் பழவினையின்
வலிமை மறந்து, பலவோடி
தொகுத்தா னெனினும் தொகுத்தபொருள்
சொரிந்து நலங்கள் தேடுகினும்
தோன்று திருந்தே யியக்குமவன்
துணைமை யின்றித் துய்ப்பரிதே
புகுத்தா தொழியா பயனமுனம்
புரிந்த வினைக ளெனவுணரும்
புலமை படைத்தார் முயற்சியினுற்
புறங்கண் டிடவே துணிகிற்பார்
வகுத்தா னருளும் பெறுவரென
வழங்கும் புலவோன் வருகவே
மதுரா புரியிற் புலமைமுடி
வணைந்தாய் வருக வருகவே. (8)

64. நன்று வருங்கால் நன்றெனவே
நயந்து கண்ட மனமுடையர்
நலிவு பொருத்தும் வினைப்பயனு
நன்மை தவிர்ந்து நலக்கேடாம்
அன்று வருங்கால் மனந்தளர்ந்தே
அல்லற் படுத லவ்வாமோ
அதனைத் தந்த திறனுடைய
தறிந்து புரிந்த வினையெனவே
கன்று முழிற் பெருவலிய
கருதப் புகுந்தால் யாவுளவே
கருத்துள் வேறே சூழுகினும்
கடிது தானே முந்துமென
மன்று மகிழ வழங்குதிரு
வாயாய் வருக வருகவே
மதுரா புரியிற் புலமைமுடி
வணைந்தாய் வருக வருகவே. (9)

65. இதனை இதனு லிவன்முடிக்கும்
இயல்பு பொருந்து மெனவாய்ந்தே
இறைமை பொருந்து மரசுடையார்
இயைபு சான்ற முறைதெளிந்தே
அதனை யவன்கண் விடுகவென
ஆணை தந்த தமிழ்ப்பெரும
அறிவி னடையு மின்பத்தை
அடையும் பிறர்க்கு மருளுவதே
முதம தளிக்கு முறையென்ன
மொழிந்த புலவர் குலவிளக்கே
முறையே கல்வி கல்லாரும்
மொழியா ரெனினே நல்லரென
வதன மலரான் வழங்கியருள்
வள்ளால் வருக வருகவே
மதுரா புரியிற் புலமைமுடி
வனைந்தாய் வருக வருகவே. (10)

# 7. அம்புலிப் பருவம்

66. கலைகளி னிரம்பியவ னென்றுலகு புகழவரு
காட்சியுளை யாதலானும்
காயமிசை நின்றுலகி லுளபொருள் விளங்குறக்
காட்டுபணி பூணலானும்
அலைகளி னிறைந்தகட லுடைபூணு நிலமங்கை
யன்புளம் பொங்கிமகிழ்வோடு
அளியுருவ னெனவெண்ணி வரவேற்க வுறுதகுதி
யமையுமொரு பெருமையானும்
நிலைமைபெறு பலகோடி யொளியுரு வணங்கியெதிர்
நிற்கவே தோன்றலானும்
நிகரெனக் கருதவரு தகுதியுளை யெனவுளம்
நினைந்துன்னை யெங்கள் பெருமான்
அலவுதவி ருளமுடைய வள்ளுவ னழைக்குமா
லம்புலீ யாடவாவே
ஆலவாய்க் கழகமம ரமுதவாய்ப் புலவனொடு
மம்புலீ யாடவாவே. (1)

67. உலகவிரு ளோட்டியுயிர் மனமலர வரியபணி
யுரிமையொடு பூணலானும்
உவமையறு மின்பமய வுருவமொடு மக்கள்மன
முட்புகுந் துறைதலானும்
புலவருக் காரமுத நல்கியவர் புகழுரைகள்
போர்த்துவரு பெருமையானும்
போதபரி பூரண கலாநிதி யெனுந்தகுதி
பொற்பொடு பொருந்தலானும்
நலமுறப் பெறுமதிய னென்றறிஞ ரேத்துமொரு
நன்னிலைமை யெய்தலானும்
ஞாலமிசை நீயுநிக ரென்றருளி னெங்கள்பெரு
நாவலனு முனையழைத்தான்
அலகில்புக ழுடையவவ னருகிலுற மனமகிழ்வி
னம்புலீ யாடவாவே
ஆலவாய்க் கழகமம ரமுதவாய்ப் புலவனொடு
மம்புலீ யாடவாவே. (2)

68. ஆயிரங் கதிர்களுள ஞாயிறம் பகவன்ரு
ளணியொளியி னெளிபெறுதிநீ
ஆயிரங் கதிர்களொடு முந்நூற்று முப்பதென
வமைகதிர்கொள் தேவனிவனே
மாயிரும் பரவையிடை யமுதமொடு வந்தெழூஉ
மாட்சியுளை நீயுமிவனே
மாயிரும் பரவையுடை நிலமகளின் மனமகிழ
வாக்கினமு தருளும் வள்ளல்
தூயவிண் டலநடவு செங்கோலி னாட்சியுள
தோற்றநீ கொண்டனையெனின்
சோதிவிண் டலமளவு வீறியுயர் கோல்கடவு
தோன்றலிவ னென்றுணருதி
ஆயினுந் தனதருளி னினையிவ னழைத்தலா
னம்புலீ யாடவாவே
ஆலவாய்க் கழகமமர் அமுதவாய்ப் புலவனெடு
மம்புலீ யாடவாவே. (3)

69. அருளினு லெமையாண்ட வள்ளலோ செம்மையா
லவனிபுகழ் நுண்மதியனும்
ஐயநீ யுலகறிய வெள்ளைமதி யென்னவரு
மமைதியுளை நன்கறிதியே
இருளினுல் மகிழுமன முடையைநீ யென்பதனை
யெவ்வுலகு நன்குணருமே
இருளையே மாற்றியுயர் மெய்யறிவி னெளிநல்கு
மேற்றமுள னெம்பெருமகன்
தெருளினு லுலகாண்ட செம்மலிவ னென்பது
தெரிந்துநின் குறைகள் தோர்ந்து
தெளிவிலாத் தீயசெயல் செய்துசிற் றினநண்பு
செய்தநீ நன்மையெய்தும்
மருளிலா நினைவுடைய னென்னின்மகிழ் வுடனுட
வருகவம் புலிவருகவே
வள்ளுவக் குழவியொடுமுள்ளுவப் புறவாட
வருகவம் புலிவருகவே. 4)

70. தேவரமு தயிலுதற் கமையலாப் பாம்பது
சினத்திற் கிளர்ந்துபகுவாய்
சேரநினை யுள்ளிட விழுங்கவரு பகைகண்டு
சித்தமயர் சிறுமையுளையே

யாவரு மடைக்கலந் தரவல்ல ரல்லரோ
　　வென்னவெங் கெங்குநோக்கி
யிமையவர்த முலகத்தின்முகிலிடை மறைந்துநீ
　　யீறிலா வல்லலுறுவாய்
தாவறு புகழ்ப்பிரம தேவனை நிகர்த்தவெம்
　　தமிழ்வள்ளல் தாண்மலரிலே
சரண்புகுந் தனையென்னி னெவ்வகைய பீழையுந்
　　தான்போக்கி யருள்புரியுமே
மாவிநய முடனெங்கள் தலைவனொடு விளையாட
　　வருகவம் புலிவருகவே
வள்ளுவப் புலவனொடு முள்ளுவப் புறவாட
　　வருகவம் புலிவருகவே.　　(5)

71. வளமைபெறு சங்கத்து வீற்றிருந் துயர்கூல
　　வாணிகன் சாத்தனுர்க்கு
வருதலைக் குத்தெனுங் கொடியபிணி தீர்த்துயிர்
　　மருந்தருள வந்தவள்ளல்
களவுநெறி சென்றநின் குறைகளை மறந்துகை
　　காட்டியரு ளாலழைத்தால்
கயநோயின் மிகுதுயர்ப் படுநினது வரலாறு
　　காசினியும் வானுமறியும்
அளவிறந் துயர்கருணை யந்தண்மை பூண்டருளு
　　அண்ணலரு கேயடைந்தால்
அரியபல நலமுநீ யெய்தலாம் குறைதவிர்ந்
　　தாளாகி யுயலுமாகும்
வளவர்வழு தியர்பொறையர் பணிபுலவன் விளையாட
　　வருகவம் புலிவருகவே
வள்ளுவப் புலவனொடு முள்ளுவப் புறவாட
　　வருகவம் புலிவருகவே.　　(6)

72. கவியே கமகன் வாதியொடு
　　கனியும் வாக்கி யெனப்புகலும்
கலைமாச் செல்வர் தலையாகக்
　　கரங்கள் கூப்பிக் கழல்பணியும்
புவியே விண்ணே பரந்தபுகழ்ப்
　　புலவர் பெருமா னழைக்கின்றான்
பொலிவில் மறுவாற் சிறுமைகொளும்
　　புரையோய் நிறைவற் றுடறேய்ந்து

செவியே யில்லாச் சிற்றரவின்
செயலுக் கஞ்சிப் புறங்கொடுக்கும்
திங்கட் கொழுந்தே மறுவில்லாச்
செவிசெஞ் செல்வன் திருமுன்பு
புவியே யிறங்கி விளையாடப்
போத வருவா யம்புலியே
பொய்யா மொழிசொல் புலவனெடும்
பொருந்த வருவா யம்புலியே. (7)

73. விழியி னெஞ்சில் நெருப்பிடையே
வியன்பாற் கடலில் விதிபடைப்பின்
விரிந்த பிறவி யைந்துடையாய்
வெண்மைக் கதிர்கொள் கலாநிதியே
இழியும் பிறவித் துயரமுணர்ந்
தெடுத்த பிறப்பே யொன்றுடையான்
இனியெப் பொழுதும் பிறப்பறியா
வேற்ற முடைய வெங்கள்பிரான்
வழியுங் கருணை விழிப்பெருக்கான்
வருகென் றுனையு மதித்தழைத்தான்
மதிமான் உருவா யெனினீயே
மனத்திற் கடுக விரைந்தோடிப்
பொழியு மமுதக் கடலவன்முன்
போத வருவா யம்புலியே
பொய்யா மொழிசொல் புலவனெடும்
பொருந்த வருவா யம்புலியே. (8)

74. நஞ்சினை யூட்டிய வமுத நிகர்ப்புறு
நயன மடந்தையரான்
நாளு மிகழ்ச்சிகள் பெற்றுளை நின்செயல்
நானில நன்கறியும்
மஞ்சினை வென்ற கொடைக்குண மேவிய
வாய்மொழி நாவலவா
மாசறு நான்முக தேவ னெனப்புகழ்
மாதவ முனிநினையே
சஞ்சல நீங்கிய நன்னல மெய்துறு
தண்ணரு ளான்மதியே
தன்கர மென்மலர் காட்டி யழைத்தது
தவமுறு பேறறிவாய்

வஞ்சனை யின்றிய நெஞ்சனோ டாடுற
வாவம் புலிவாவே
வாயுறை வாழ்த்தருள் வாயின னருகுற
வாவம் புலிவாவே. (9)

75. இரவொரு பணியென வுலக மியற்றிய
விறைவன் விதித்திடுமேல்
இறுதியை யுறுகென வவனை யொறுத்திடு
மியல்மொழி நாவலவன்
இரவுறு பணியினை யெனநினை யறிவுறின்
யாது விளைந்திடுமோ
எழில்வளர் குளிர்கதி ரமுதுகு மிளமதி
யிதனை மனங்கொளுவாய்
பரவுறு குணமலை யமர்பவர் சினமுறு
பரிசினை யணுகுவரேற்
பழிபடு மவரொடு கணமெனு நிலையுறு
பதநில வலரறிவாய்
வரவறு துணிவொடு நிலமிசை மருவுற
வாவம் புலிவாவே
வாயுறை வாழ்த்தருள் வாயின னருகுற
வாவம் புலிவாவே. (10)

# 8. சிற்றிற் பருவம்

76. மறவர் குலத்தின் செருக்கதனை
வகுத்து விளக்குந் திருவுளத்தான்
வயஞ்சா லென்னை முன்னீவர்
வருதல் தவிர்க தெவ்விர்காள்
இறைவ னவர்முன் நின்றவரே
இம்ப ருலகிற் கன்னின்றார்
ஏறி விண்ணணி னிலைபெற்றார்
எனவே தெளிவா யருள்புலவ
சுறவு நீந்தும் பெருங்கடலிற்
சொரியும் சங்கின் முத்தினொடு
தூவெண் மணலைக் கலந்தளியேம்
துளிக்கும் வண்ட லாட்டயரத்

திறவி தமைப்பான் முயல்கின்ற
சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவள் ளுவனே திருவடியாற்
சிறியேம் சிற்றில் சிதையேலே. (1)

77. கான முயலை யெய்துகொலும்
கணையிற் களிற்றின் மேற்போக்கிக்
கருதும் கருத்து நிறைவேருக்
கதிர்வே லேந்தல் பெருமையென
வான முயரும் புகழ்பொருந்து
மன்னர் படையின் மறவருக்கு
வாய்த்தற் குரிய மறம்விளக்கும்
வாய்மை தழைத்த தவக்கொழுந்தே
மான முடைய சமர்மறவர்
வாளா லுயிரை யிழவாமை
வழுவென் றுணருந் தமிழ்க்குடியின்
வாழ்வு புகன்ற திருவாய
தேனின் மொழியா லிரக்கின்றேம்
சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவள் ளுவனே திருவடியாற்
சிறியேம் சிற்றில் சிதையேலே. (2)

78. கைவேல் களிற்றின் சிரத்தழுத்திக்
கணையும் வில்லும் வாளுமின்றிக்
கருந்தோ ளொன்றே துணையாகக்
களத்து மறவ ரிடைவருவோன்
மெய்வே லுரத்தே பாய்ந்ததனை
விழித்துக் கையாற் பறித்தெடுத்து
விரவா ரிடையே துணிவினெடு
மிகையா னகைத்துப் பாயுமெனப்
பொய்யே யறியாத் திருவாயாற்
புகழ்ந்து தமிழ மறவரியல்
புவியோ ரறிய விளக்கவந்த
புகழ்சால் புலமைப் பெருமானே
செய்வே மடியேஞ் சிறியமனை
சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவள் ளுவனே திருவடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (3)

79. புரந்து நெடுநாள் பட்டப்பயிற்றிப்
பொருவெங் களத்தின் விடுமன்னர்
புன்கண் பயில்கண் ணீர்மல்கப்
புகழி னுடம்பு பெறுஞ்செல்வம்
இரந்து கொள்ளத் தகுவதென
இயல்செஞ் சோற்றுக் கடன்கழிக்கும்
இசையான் விளங்கு மறவர்செயல்
எடுத்துப் பேசுங் கனிவாய
சுரந்து சுரரும் பெறலரிய
சுவைசா லமுதம் பொழிந்தருளும்
தூய முனிவ வாசுகியைத்
துணையா யடைந்த தவமணியே
அரந்தின் வேல்போல் விழிவாட
அடியேஞ் சிற்றில் அழியேலே
அறஞ்சொல் பொய்யா மொழிப்புலவ
அடியேஞ் சிற்றில் அழியேலே. (4)

80. புரைதீர் நட்பின் திறமறிவார்
புணர்ச்சி பழக வேண்டாவாம்
புகுந்த வுள்ளத் துணர்ச்சியினுற்
பொருந்து மனமே பெருமைதரும்
கரையா லடங்கா மகிழ்ச்சியினுற்
கலந்து நகுதற் பொருட்டன்று
கடமை பிறழ்ந்த மிகுதியிடைக்
கடிந்து மேற்சென் றிடித்தற்கே
உரைசா னட்பை யுறல்வேண்டும்
உண்மை விளக்க மிதுவெனவே
உலக மனைத்து மறிந்துணர
ஓதப் பிறந்த வொருபுலமை
அரசே வருந்தி யமைக்கின்றேம்
அடியேம் சிற்றில் அழியேலே
அறஞ்சொல் பொய்யா மொழிப்புலவ
அடியேஞ் சிற்றில் அழியேலே. (5)

81. உடுக்கை யிழந்தான் கைபோல
ஓடி யாங்கே விரைந்தடையும்
உள்ள முடையார் உயிர்கொடுக்கும்
உரிமை பூணும் திறமுடையார்

இடுக்கண் களையு நலமுடையார்
இனிய நட்பே மெய்நட்பாம்
எதிரே முகத்தின் முன்நகைத்துள்
இயங்கு மினிய நகையில்லார்
அடுக்கு நட்பு நட்பன்றும்
அகத்தின் நகவே யமைநண்பர்
அடையப் பெறுதல் பெரும்பேறென்
றறிய வுரைத்த குணக்குன்றே
அடுக்கல் முனிவன் தமிழ்பயின்றாய்
அடியேஞ் சிற்றி லழியேலே
அறஞ்சொல் பொய்யா மொழிப்புலவ
அடியேஞ் சிற்றி லழியேலே. (6)

82. ஒருமையு ளாமை யடங்குத லொப்ப
வொடுங்கும் தவநெறியே
உலகினை வெல்லுந் திறமுள தென்னும்
உண்மையை யோதியவ
பெருமையொ டின்பம் விளைகில வெனினும்
பேதையர் கேண்மையினே
பிரிவினி லெய்தும் பீழைக ளின்மை
பெரிதினி தெனமொழிவாய்
அருமையி தென்னும் தளர்வி னகன்றே
அயர்வற முயல்வதனால்
அடைவது திண்ணம் பெருமை முயற்சியி
னுகுவ தெனுமறிவ
திருவடி நோவச் சிறியேஞ் சிற்றில்
சிதையா தருள்வாயே
திருமறை பாடும் புலவா சிற்றில்
சிதையா தருள்வாயே. (7)

83. தேவரி னிகர்வர் கயவரு மனையார்
சித்த நினைத்தனவே
செய்ய விழைந்தனர் வரும்வினை வோர்கிலர்
சேர்வன சேர்கெனவே
மேவன செய்தன ரொழுகுற மனமுள
மிகுதி படைத்திடலான்
வேறுள பிறர்புகல் மறைபிறர் செவியுற
விட்டு விளம்புதலான்

தாவுறு பறையினை மானுவ ரவரெனச்
சாற்றிய மெய்ம்மொழியாய்
தாளமு மணிகளும் வைத்து மகிழ்ச்சி
தழைப்புறும் வண்டலினேம்
சேவடி நோவச் சிறியேம் சிற்றில்
சிதையா தருள்வாயே
திருமறை பாடும் புலவா சிற்றில்
சிதையா தருள்வாயே. (8)

84 குன்ற நிகர்ப்பவர் குன்ற மதித்திடிற்
குடியொடு நின்றவரும்
குடிகெட மாய்குவ துறுதி யெனத்தெளி
கொள்கை விளக்கினையே
நின்ற நினக்கு நிகர்ப்புற வல்லவர்
நிலமிசை வானினிடை
நீயு மறிந்தனை யொருவரு மிலரெனல்
நிறைமொழி நாவலனே
கன்று மனத்தொடி யாரின தருள்பொழி
கண்ணிணை மலர்மலரும்
கமல முகத்தின தடியவ ரென்றொரு
கட்டுரை சொற்றிடுவேம்
சென்று நடந்தருள் சிறியேம் சிற்றில்
சிதையா தருள்வாயே
திருமறை பாடும் புலவா சிற்றில்
சிதையா தருள்வாயே. (9)

85. வெம்மை விளங்கிய கனலி சுடப்படின்
விளிவற வுயவுளதே
விரிகட லிடையினில் வங்க மிழந்தவர்
மீடலு முளதன்றே
தம்மை யறிந்துள சான்றவர் நெஞ்சு
சலிப்புறு பிழைபுரிவார்
தம்மொடு தங்குடி தன்னையும் நரகிடை
தள்ளுவ ரெனமொழிவாய்
எம்மை யறிந்தனை நின்னை யறிந்துளை
எளியரி னெளியமியாம்
இணையறு பெருமையை நினதருள் நாடுறு
மியலின திளகழலாஞ்

செம்மலர் நோவச் சிறியேம் சிற்றில்
சிதையா தருள்வாயே
திருமறை பாடும் புலவா சிற்றில்
சிதையா தருள்வாயே. (10)

## 9. சிறுபறைப் பருவம்

86. அறிவுதெளி வெய்திலாப் பேதைநல் வினையா
ளளவற்ற செல்வமடையின்
அகடார வேதிலர்க ளுண்டுதேக் கிட்வுறவி
னவர்தமர்கள் பசியினினைவார்
நெறிமருளு பித்துடைய வொருவன்மது பானமு
நிரம்புற்ற நிலைமைதனையே
நிகராகு மறிவிலாப் பேதையொரு பொருள்பெற்ற
நிலையென் றுணர்த்துமறிவ
வெறிமலியு மொருபேதை வினைபுரிய முன்வந்து
மெய்ம்மையு மிழந்துமேலும்
விரிபொய்ம்மை சூழலாற் புனைபூணு மெனுமுண்மை
வேதமென வோதுமுனிவ
செறிவுதெளி வினிமைமலி மழலைபயல் குழவியே
சிறுபறை முழக்கியருளே
செழியர்தமிழ் பொதுமறையை யடையவருள் கிழவனே
சிறுபறை முழக்கியருளே. (1)

87. வினையின்வலி மதியாது தாழாது முலையாதும்
விழைவொடு முயற்சியுருவன்
மிக்கதிற லூழினையு முப்பக்க மாக்குவது
மெய்யென விசைத்தபுலவ
நினைவினெடு மேற்கொளு முயற்சிதிரு வினையாக்கும்
நெஞ்சுற முயற்றின்மையே
நிறைதுயர மடையவரும் வறுமையினை நலகுமென
நேயமோ டுணர்த்துமறிவ
தனைநிகர்வ தொன்றிலாத் தெய்வத்தி னாகாத
தன்மையுள நன்மைதானும்
தன்முயற் சிக்குரிய மெய்வருத் தக்கூலி
தருமென்று சொற்றசெல்வ

திணையளவு நன்றியையு மறவாமை தெளிவித்த
சிறுபறை முழக்கியருளே
செழியர்தமிழ் பொதுமறையை யடையவருள் கிழவனே
சிறுபறை முழக்கியருளே. (2)

88. நண்பர்களை யாய்ந்தாய்ந்து கொள்ளுநெறி முறைமையுற
நவிலுதிரு வுள்ளமுடனே
நற்குடியும் வருகுடியு மியல்பினவர் சேரினமு
நன்கிலாக் குற்றங்களும்
எண்பெருமை பிறவுளவு மோர்ந்தபினர் நட்கவென
வினிதுணர்த் தியபுலவனே
ஏற்றமுள குடிவந்து பழிநாணு பவனட்பின்
எய்தவரு நன்மைபலவே
பண்புடைய நண்பர்குறை கண்டளவி னெஞ்சுநோம்
பரிசினு மிடித்துநன்மை
பயிலவே போதிக்கு மனமுடைய ரெனவோது
மளகிலா வாய்மையுடையாய்
திண்படைஞர் சூழவரு தமிழரசர் செல்வமே
சிறுபறை முழக்கியருளே
செழியர்தமிழ் பொதுமறையை யடையவருள் கிழவனே
சிறுபறை முழக்கியருளே. (3)

89. ஒருமைப் பிறப்பிற் பெருங்கல்வி
ஒருவற் கெழுமைப் பிறப்பினிலும்
உரிய வேமாப் பருளுமென
வோதத் துணிந்த வொருபுலவ
பெருமைக் குரிய கல்வியினைப்
பேணிக் கல்லா வொருவனுந்தான்
பெரியார் சொல்லு மறநுட்பம்
பிறவிப் பயனுக் கேட்குமெனின்
அருமைப் பேற்றைக் கேள்வியினல்
அடையப் பெறுவா னெற்கத்தின்
அதுவே யூற்றுந் துணையாகும்
அவனுக் கெனவே யருளுபவ
திருவைப் பணிகொள் தமிழ்நாடா
சிறுபறை கொட்டி முழக்குகவே
திருவள் ளுவனு நான்முகனே
சிறுபறை கொட்டி முழக்குகவே. (4)

90. அகத்தின் பொருளைத் தமிழ்மக்கள்
அறிந்த வண்ண மாய்ந்துணர்ந்தே
அமைய விளக்கும் கருத்துடனே
ஐயைந் தாகும் அதிகாரம்
இகத்தின் நலமா மின்பநெறி
யினைப் பொருத்தி யிழைத்தனையே
இயனூல் தருதொல் காப்பியரும்
இறைய னாரும் இலக்கியமென்
றகத்தின் மகிழ்ந்து நீபுனைந்த
வரிய பெருமைக் குறள்களையே
அமுதத் தமிழ மொழிகொள்ள
ஆணை விதித்த வண்ணமெனச்
செகத்தின் மலிந்த புகழுடையாய்
சிறுபறை கொட்டி முழக்குகவே
திருவள் ளுவனா நான்முகனே
சிறுபறை கொட்டி முழக்குகவே (5)

91. நனவி னிடையே நான்காண
நல்கா தென்னை மறந்திருந்து
நாடு தோறும் பொருள்தேட
நடந்த நயமில் காதலரைக்
கனவி னிடையே யிரவெல்லாம்
கண்டு கண்டு மகிழ்வதனால்
கழியு நீர்த்தா மென்னுயிரும்
கழியா திருக்கு மெனத்தலைவி
தனது நிலைமை யவன்வாக்கால்
தமிழ ரொழுக்க முறைதழுவத்
தகுதி விளங்கத் தருபுலவ
தமிழ மகளின் தவப்பேறே
தினமு முலகங் குறள்பயிலச்
சிறுபறை கொட்டி முழக்குகவே
திருவள் ளுவனா நான்முகனே
சிறுபறை கொட்டி முழக்குகவே. (6)

92. செல்லல் தவிரு நினைவுளதேற்
செவியி னெனக்கே யுரைத்தருள்க
செல்வந் திரட்டுங் கருத்தோடு
சென்று மீளும் செயல்விளக்க

வல்லை வருவல் மயங்காதி
மாதே யென்னு மவ்வுரையை
வருங்கால் வாழ வல்லவர்பால்
வழங்கல் தகுமென் றுரைக்குமொரு
நல்ல தலைவி பிரிவாற்கு
நயத்தை விளக்கு நலமுடையாய்
நன்றே தரினு நடுவிகந்து
நணுகு மாக்க மொழிகவெனச்
செல்லு மொழியா லருள்புலவ
சிறுபறை கொட்டி முழக்குகவே
திருவள் ளுவனும் நான்முகனே
சிறுபறை கொட்டி முழக்குகவே. (7)

93. தினையின தளவுக் கிணையில தாகிய்
சிறுபுன் னீரதுதான்
திவமுறு செங்கதிர் படர்வுறு காலை
தெளிந்து விளங்குறவே
பனையின தளவும் காட்டி விளக்குறு
பண்பென நின்குறளில்
பழமறை யோதிய பொருள்க ளனைத்தும்
பயில வமைத்தனையே
தனைநிகர் பொருளொன் றின்றென நின்று
தனித்துறு மெய்ப்பொருளைச்
சமரச நெறியக மனைவரு முணர்வுறு
தத்துவம் வைத்தனையே
முனைவரு மறிதற் கரியன வறிவ
முழக்குக சிறுபறையே
முப்பால் தமிழர்க் கருளிய குழக
முழக்குக சிறுபறையே. (8)

94. நினைப்பவர் போன்று நினைக்கில ரென்பது
நெஞ்சம் விளக்கியதே
நேய மிகுத்தவர் போலுரை பொய்யுற
நீங்கிய காதலர்தாம்
சினைப்பது போன்று புறப்படுதும்மல்
சிறைக்கு ளடங்குறவே
சென்றனர் மீளுவ தென்றென நாடுறு
செயலுள தலைவியுளம்

தனைத்தமிழ் நூலவர் கருதிய வாறு
தழைப்புற வோதியவ
தலைவ ருளத்தினின் யாமு முளேமவர்
தாமெ முளத்துமுளார்
முனைப்பது காத லெனச்சொலு நாவ
முழக்குக சிறுபறையே
முப்பால் தமிழர்க் கருளிய குழக
முழக்குக சிறுபறையே. (9)

95. விருந்து புறத்துள தாகிய நிலையினில்
வேட்கு முணர்ச்சி யொடும்
மிக்க கடும்பசி யாலுயிர் வீடினும்
வெந்துயர் மாற்றவரும்
மருந்து நிகர்ப்புற வந்துள வுணவையும்
மனமுற வுண்பதையே
வாழ்வுறு நெறிகளை நள்ள ரறிந்தவர்
மாண்புறு மெனநினையார்
பொருந்து சிறப்பொடு செல்வமு நல்குறு
புகழுள அறநெறியே
போதுவ தறிவுடை மக்களி னியலெனல்
போத விளக்கியவ
முருந்து நிகர்ப்புறு சிறுவிரல் வைத்து
முழக்குக சிறுபறையே
முப்பால் தமிழர்க் கருளிய குழக
முழக்குக சிறுபறையே. (10)

# 10. சிறுதேர்ப் பருவம்

96. அருந்துமுண வற்றதனை யாய்ந்துணரு மறிவினுன்
அளவறிந் துண்ணுமொருவன்
அவனியிடை யுடலையுற வருபிணிக ளொன்ருனு
மவலமுற லில்லையெனவும்
மருந்தென்ன வொன்றினையும் வேண்டுகில னன்னவன்
வாழுநா ளெல்லையெனவும்
மாநல்ல துய்த்திடுவர் துவரப் பசித்தபினர்
வயிறடிமை கொள்வரெனவும்

பொருந்துமுண வள்வறிந் துண்பான்க ணின்பமது
பொங்குமென வுந்தெளிவறப்
போந்துகழி பேரிரையை மேவுபவ ஞேயினுற்
புன்கணே யெய்துமெனவும்
திருந்துநெறி சொற்றருள் மருத்துவச் செம்மலே
சிறுதே ருருட்டியருளே
திருவால வாய்ப்பதியி லறமோது நாப்புலவ
சிறுதே ருருட்டியருளே. (1)

97. நகையீகை யின்சொலொடு மிகழாமை யென்னுமிந்
நாற்குணமு மியல்பினமையும்
நற்குடிச் செல்வரொரு சிலரேனும் வாழ்வதால்
நாடுநல முறுதல்மெய்யே
வகையான் வழங்குபொருள் வீழ்ந்தமிடி நாளினிலும்
வாழ்வறி பழங்குடியினோர்
வாய்ப்புடைய பண்புபிரி செயலொன்று மனமார
மண்ணிடை யியற்றறுணியார்
தொகையா யடுக்குவரு கோடிபொன் பெற்றுமவர்
சூழ்வறக் குன்றுவசெயார்
தோன்றுகுறை மதியின்மறு வொப்பவுல கெங்குமறி
துயரினை விளைக்குமெனவே
திகையாது சான்றவர்செல் நெறிவிளக் கியமுனிவ
சிறுதே ருருட்டியருளே
திருவால வாய்ப்பதியி லறமோது நாப்புலவ
சிறுதே ருருட்டியருளே. (2)

98. பிறப்பதனி லெருக்குமே யெவ்வகை வுயிர்களும்
பேதமெவ் வணம்வருமெனின்
பின்னரவை செய்கின்ற செயல்களாற் கல்வியாற்
பேணுமுயர் நல்லொழுக்காற்
சிறப்பதனி லொப்பதில வெவ்வேறு நிலைமையுறல்
தெளிவென் றுணர்த்துமறிவ
சிற்சிலவர் மேனின்று மேன்மையினை யெய்திடார்
சிலர்கீ ழிருந்துமுயர்வார்
உறப்பெறுவ சீர்மையினை நாடுவா ரெஞ்ஞான்று
மோர்ந்துணர்ந் தருமையுடைய
உலகுவக் கும்பணிகள் புரிவரென் றமுதொப்ப
வோதியருள் செய்யவாய

திறப்படுவ நீதிநெறி யெம்மனோர்க் கருள்கையாற்
சிறுதே ருருட்டியருளே
திருவால வாய்ப்பதியி லறமோது நாப்புலவ
சிறுதே ருருட்டியருளே. (3)

99. வில்லே ருழவர் பகைகொளினும்
வேலா லுழுநர் பகைகொளினும்
வேங்கை நிகர்ப்பப் பாய்ந்துவரும்
விறல்வா ளுழவர் பகைகொளினும்
சொல்லே ருழவர் பகைகொள்ளும்
சூழ்ச்சி தெளியா வினைபயின்று
துறையு நெறியு மறியாது
துயரக் கடலில் மறியாதிர்
வல்லே நிறைய மொழிமாந்தர்
வாயி னெழுந்த சொற்சாத்தால்
மரபுங் குடியு மொருங்கழியும்
வளஞ்சால் வாழ்வும் சிதையுமெனும்
செல்லே நிகரு மருண்மொழியாய்
சிறுதே ருருட்டி யருளுகவே
திருவள் ளுவமெய்ப் புலமணியே
சிறுதே ருருட்டி யருளுகவே. (4)

100. இன்னு வினைகள் புரிந்தவரை
இயலு மாற்ற னெறுப்பலெனும்
எண்ண முடையா ரவர்நாண
இதய மொத்து நலம்புரிக
இன்னு வியற்று மினத்தவர்க்கும்
இனிய நலனே புரியாக்கால்
என்ன பயத்த தாகுமுயர்
இயல்பாஞ் சால்பே யெனப்புகன்ருய்
மன்னு வுலகின் மன்னுநெறி
மனத்தா னினைவார் புகழ்பொருந்தும்
வகைசா லறங்கள் தழுவுகென
வழங்கும் வாய்மைப் பெரும்புலவ
தென்னு டுடைய தவமணியே
சிறுதே ருருட்டி யருளுகவே
திருவள் ளுவமெய்ப் புலமணியே
சிறுதே ருருட்டி யருளுகவே. (5)

101. உள்ளத் தொன்றை யுள்ளுவதும்
உள்ளி யதனை யுலகுகொள
உவக்கும் சொல்லா லுரைப்பதுவும்
உரைக்கு மன்ன வுரைப்பொருளைத்
தெள்ளத் தெளியத் தெரிவதுவும்
செய்தற் குரிய செயலாகும்
தெளிந்த மெய்ம்மைப் பாவலருள்
தெய்வப் புலவர் சிகாமணியாம்
வள்ளற் பெருமா னிணைகர்க்கும்
வாக்கின் செல்வம் படைத்தவரும்
வழங்கு நினது பொதுமறைபோல்
வளஞ்சான் மொழியு முண்டென்னத்
தெள்ளி யுரைப்பா ருளரேயோ
சிறுதே ருருட்டி யருளுகவே
திருவள் ளுவமெய்ப் புலமணியே
சிறுதே ருருட்டி யருளுகவே. (6)

102. தவத்தின் மிகுந்த காசிபனார்
தரணிக் குதவுங் குறளங்காள்
தரைமே னின்று மூவுலகுந்
தாளா னளந்த தெனமொழிப
நலத்தின் மிகுந்த வள்ளுவநீ
நாவாற் படைத்த குறட்செல்வம்
ஞான நெறியின் விளக்கெனலாய்
நாட்ட மரிய வுலகமெலாம்
சிவத்தின் மலிய விரண்டடியாற்
சென்று மனத்தை யளந்ததுவே
சிறப்பு நினது படைப்பினுக்கே
தேவா வுண்மை யுண்மையெனத்
திவத்தின் விளங்கு புகழுடலாய்
சிறுதே ருருட்டி யருளுகவே
திருவள் ளுவமெய்ப் புலமணியே
சிறுதே ருருட்டி யருளுகவே. (7)

103. நன்று வினைப்பினு நடுவி ணிகந்து
நலிந்து பெறுந்திருவை
நன்னெறி காண்பவர் ஒழிகென வோதிய
நாவர சர்க்கரசே

அன்று நினைக்குது மென்ப தொழித்தி
யறச்செயல் தன்னையினே
ஆமள வாற்றுதி யாயினினக்கஃ
தாற்ற லளிப்பதுவே
பொன்று நிலைக்கணு நன்றுறு முதவி
பொறுப்பது வாமெனவே
பூமியின் வாழுநர் தெளிவுற வோதிய
பொய்யறி மெய்ம்மொழியாய்
ஒன்று சிறப்பினை நன்றறி செல்வ
வுருட்டுக சிறுதேரே
உலகிற் கொருபொது மறைசொல் புலவ
னுருட்டுக சிறுதேரே. (8)

104. கண்ணொடு கண்ணிணை காதலர் தம்மிடை
காணுவ தொப்புறுமேல்
கலக லெனப்பிறர் செவியுறு வாய்மொழி
காட்டுறு பயனிலையே
கண்ணுற லாதிய வைம்புல வின்புள
காரிகை கண்ணெனவே
காதன் மணம்பெறு பெண்ணொ டிணங்கிய
கற்புறு கலவியினும்
எண்ணுத லரியதொ ரின்ப நலத்தினை
இருதுணை தோள்புணரும்
இறைமைகொ ணரண னுலகினு மடைகுவ
தின்றென வருள்புலவ
ஒண்ணுதன் மகளிரி னுயர்வறி தேவ
வுருட்டுக சிறுதேரே
உலகிற் கொருபொது மறைசொல் புலவ
னுருட்டுக சிறுதேரே. (9)

105. வேட்புறு போதினி லவையவை போலுறு
மேதக வுள்ளதுவே
மிகுமண மலர்செறி குழலினள் தோளென
மெய்ம்மை விளக்கினையே
தீட்டிய வேனிகர் கண்ணிணை யாள்குணம்
சிந்தை நினைந்தறியேன்
சிந்தனை செய்தல் மறந்தபி னல்லது
சேர்கல தென்றனையே

ஈட்டிய பொருளொடு முலகிடை வாழுநர்
இங்ஙனம் வாழ்கவென்று
இணையறு கற்புள வாசுகி மங்கையொ
டில்லறம் நாட்டினையே
ஓட்டிய விருளினை பாட்டிய லறிஞ
வுருட்டுக சிறுதேரே
உலகிற் கொருபொது மறைசொல் புலவ
னுருட்டுக சிறுதேரே, (10)

## வாழ்த்து

106. அறநெறி வாழிய இன்பமும் வாழிய
அவைகள் நலம்பெறவே
அமைவுறு பொருணெறி வாழிய மூன்றும்
அமைந்தபி னுடுவதாம்
துறைபல பூண்டுள வீட்டியல் வாழிய
சொல்லி னளப்பரிதாம்
தோற்றமு மீறுமில் மெய்ப்பொருள் வாழிய
சொல்லிய சொல்லினையே
முறையொடு தொடர்வுறு பொருளினை யடிமைகொள்
முனிவரர் வாழியவே
முத்தமிழ் வாழிய வாரியம் வாழிய
மொழியினம் வாழியவே
நிறைவுறு பொருள்பெறு குறளினை யோதிய
நிறைமொழி நாவலர்தாள்
நிலவிய பெருமைகொள் பனுவலு நிலமிசை
நீடுற வாழியவே.

